நடத்திய பரிசோதனைகள் நிரூபிக்கின்றன...







# பிஸ்கட் என்றால் இதுதான் — சுவைக்கும்

## வைட்டமின்களுக்கும் போஷாக்குக்கும் இதுதான்:

பிரிட்டானியா

# க்ளுக்கோஸ்-D



பிரிட்டானியா க்ளுக்கோஸ்-Dயுடன் மற்றெந்த முன்னணி க்ளுக்கோஸ் பிஸ்கட்டை ஒப்பிட்டுப் பார்க்க பரிசோதனைகளில் தெள்ளத் தெளிவாக நிரூபிக்கப்பட்டுவிட்டது: வைட்டமின் சத்திலும், மொத்த போஷாக்குத் தன்மையிலும் உயர்ந்தது க்ளுக்கோஸ்-D பிஸ்கட் தான். இனிமைக்கும், சுவைக்கும், மொறுமொறுப்புக்கும், அதிகமாக விரும்பப்படுகிறது. சக்தி வேண்டுமா— க்ளுக்கோஸையும் விட 20 சத விகிதம் அதிக சக்தியைத் தருகிறது க்ளுக்கோஸ் D. பிரிட்டானியா க்ளுக்கோஸ்-D பிஸ்கட்— தித்திக்கும் சக்தி!




எனவேதான், வேறெந்த க்ளுக்கோஸ் பிஸ்கட்டையும் விட அதிக மக்களைக் கவர்ந்துள்ளது பிரிட்டானியா க்ளுக்கோஸ்-D

பிரிட்டானியா பிரிட்டானியா பிஸ்கட்டுகள் மிகச் சிறந்தவை

லிண்டாஸ் BC-GL-10-140 TM

புதியது!

சுவை மிகுந்த கோகோ-
மால்ட்-சர்க்கரை நிறைந்த சத்தான பானம்!

# ஸ்பென்ஸரின் பிக்அப்

குறைந்த செலவில் அதிகச் சுவை
அளிக்கும் அரிய பானம்!

பார்க்கும்போதே நாவில் ஜலம் ஊறச் செய்யும் சத்தான பானம் பிக்அப். அதிகச் சுவைக்கென கோகோ அதிக அளவில் அதில் அடங்கியுள்ளது.

அத்துடன் உங்கள் உடலுக்கும் மூளைக்கும் தேவையான புரதம், ஊட்டச் சத்துக்கள், கனிப் பொருள்களும் அடங்கியுள்ளன. எனவே, எல்லா வயதினருக்கும் ஏற்ற பானம்.

ஒவ்வொரு துளி பிக்அப்பிலும் அதிகமான சிக்கனத்தையும் பெறுகிறீர்கள்.



நினைவிருக்கட்டும்.
இது ஸ்பென்ஸரிலிருந்து
கிடைக்கிறது. ஆகவே
இதன் தரம் கட்டாயமாக
உயர்ந்ததாகத்தான்
இருக்கவேண்டும்!






ஸ்பென்ஸர்
அண்ட் கோ.
லிமிடெட்
சென்னை

தற்சமயம் சென்னையில்
மட்டும் கிடைக்கிறது

ஸ்பென்ஸரின் பிக்அப் — உண்மையான ருசிக்கும், குன்றாத உடல் நலத்திற்கும்

நீங்களும் அணியுங்கள்

உங்கள் பணத்துக்கு அதிக மதிப்பைத் தருகிறது

MONSIEUR

RAMSON

DAVARKIN

DAVANJOY

ஸ்ரீ தாவணகெரே காட்டன் மில்ஸ் லிமிடெட்
தாவணகெரே, கர்நாடகம்.

பழைய பரம்பரை
நவீன உருவம்
எடுக்குமிடம்!



THOMAS/DCM 675/Tam



## வானவில்லின் வனப்புமிக்க வண்ணங்களை எட்டிப் பிடித்து

## உங்கள் இல்லங்களில் இட்டு நிரப்பவே

எழில் கொஞ்சி நிற்கும் இயற்கை அழகினை மிஞ்சிட முனையும் போது, கைதேர்ந்த கலைநுட்பமும் கச்சிதமான அனுபவப் பாங்கும் இணைசேர வேண்டும்.

இந்த முன்னணித் திறமை இயோமைட் தனக்கென்றே நிலைநாட்டியுள்ள முத்திரைச் சிறப்பாகும்.

இயோமைட் பெயிண்ட்கள் மட்டுமே இயற்கை வனப்பிற்கு இணையான வண்ணங்களை, சாயல்களை, நிறக்கலவைகளை உங்களுக்குப் படைத்தளிக்க வல்லவை.

இவைகளைப் பயன்படுத்திப் பார்த்திருப்போரை இப்போது கேட்டுப் பாருங்கள், இனி எப்போதும் நீங்கள் தப்பாமல் தேடுவீர்கள் இயோமைட்.

**இயோமைட் பெயிண்ட்ஸ்**




bp

இதனைத் தயாரிப்பது




பிளண்டெல்—
பெர்மோக்ளேஸ் க்ரூப்

**பிளண்டெல் இயோமைட் பெயிண்ட்ஸ் லிட்.**

பதிவு அலுவலகம்:
ருஸ்தம் பில்டிங், வீர் நரிமன் ரோட், பம்பாய்-400001
கிளைகள்: தாணா, அஹமதாபாத், டில்லி, கான்பூர், சண்டிகார், கல்கத்தா, பெங்களூர், சென்னை, கொச்சின் மற்றும் ஹைதராபாத்.

**சேவையும் தரமும் சேர்ந்த வண்ணக் கலவை!**

VENART/GAA/TM





## கச்சேரி !

எங்கள் வீட்டுச் சபாவில்,
அடுப்புப் பூனை மியாவென வயலினிசைக்கும்;
காலி வயிறு பசியால் 'கடமுட' கடமாகும்;
பசித்த குழந்தை முகாரி பாடும்;
அதனின் முதுகோ
அடியேனடியால் மத்தளமாகும்;
எந்தன் இல்லாள்
'இல்லை' என்றே பல்லவி தொடுப்பாள்...
இதனை வெல்ல எந்தப் பாடகர்
இங்கே உள்ளார்?

— மன்னை பாண்டியன்




# கல்கி

ராக்ஷஸ
பங்குனி 8
மார்ச் 21
1976


"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.



ரவிக்குக் காயம்
படும்போது

# ரவியின் அன்னை, நோய் தொற்றாமல் அவனைப் பாதுகாக்க, BAND-AID BRAND டிரஸ்ஸிங்குகளையே நம்புகிறார்.

காயங்களை திறந்திருந்தால் தொற்று நோய் பரவக்கூடும். எனவேதான், விவேகமுள்ள தாய்மார்கள், காயங்களைப் பாதுகாத்து ஆற்றுவதற்கு பாண்டு-எய்ட் பிராண்ட் டிரஸ்ஸிங்குகளை மட்டுமே நம்புகிறார்கள். பாண்டு-எய்ட் பிராண்ட் டிரஸ்ஸிங்குகள் நோய்க் கிருமி தொற்றாமல் காயங்களைக் காக்கின்றன. அவற்றிலுள்ள நிரூபணமான ஆன்டிசெப்டிக் மருந்து மொர்க்கியூரோக்ரோம், பிளவுபட்ட சருமத்துக்கு இதமளித்து ஆற்ற உதவுகிறது.

பாண்டு-எய்ட்
பிராண்ட்
டிரஸ்ஸிங்குகளை
ஜான்ஸன் & ஜான்ஸன்*
மட்டுமே தயாரிக்கிறார்கள்.
Johnson & Johnson*




மொர்க்கியூரோக்ரோம்
மருந்து கலக்கப்பட்டது.

கல்கி
மலர் 35
இதழ் 34



# சுண்டைக்காய் கால் பணம்....

**நா**ய் வாலை நிமிர்த்தினாலும் நிமிர்த்தலாம்; தேசப் பொருளாதாரம் சுருண்டு கொண்டால் நிமிர்த்துவது ரொம்பக் கஷ்டம்.

கடினமான காரியத்தில் வேஷ்டியை வரிந்து கட்டி, இறங்கியதன் விளைவாக, நெருக்கடி நிலைப் பிரகடனத்துக்குப் பிறகு, பல அத்தியாவசியப் பண்டங்களின் விலைகள் ஓரளவுக்குக் குறைந்துள்ளன.

ஆனால் இது பொருளாதார முன்னேற்றம் என்ற ஏணியின் முதல் படியே. அடுத்தடுத்து ஏணிப் படிகளில் ஏறுவது போல் பல நடவடிக்கைகளை எடுத்தால், சுபிட்சக் கன்னியை நிலா முற்றத்தில் சந்திக்கலாம். இல்லாதபோனால் வேதாளம் மீண்டும் முருங்கை மரத்தில் ஏறிக் கொள்ளும்; அதற்கு முன் ஏணியைத் தட்டி விடவும் செய்யும்.!

பலவீனமுற்றிருக்கும் பொருளாதாரத்துக்கு அதிர்ச்சி வைத்தியம் அவசியமாக இருந்திருக்கலாம். போஷாக்கு அளிக்க டானிக்கும் தேவை. பாராளுமன்றத்தில் சமர்ப்பிக்கப்படவிருக்கும் பட்ஜெட்டில் இந்த டானிக் கிடைக்கும் என்று நாடு எதிர்பார்க்கிறது.

பாவம், திரு சி. எஸ். அவர்களின் பணி எளிதல்ல. இதுநாள் வரை நிதிமந்திரிகள் ஐந்தாண்டுத் திட்டங்களுக்கு மட்டும்தான் நிதி வசதிகளைத் தேடினார்கள். திரு சி. எஸ். இருபது அம்சத் திட்டத்துக்கும் சேர்த்துத் தேட வேண்டும். அல்லது ஐந்தாண்டுத் திட்டத்தை அப்புறம் பார்த்துக் கொள்ளலாம் என்று மூட்டை கட்டி வைக்க வேண்டியதுதான். இருபது அம்சத் திட்டத்துக்கே நடப்பு ஆண்டுக்கு 2100 கோடி ரூபாய் தேவைப்படுகிறதே !

பொது பட்ஜெட்டுக்கு முன்னால் ரயில்வே பட்ஜெட் வந்துள்ளது. அதற்கும் முன்பாக இதுவரை இல்லாத புதிய பழக்கமாகத் தபால் தந்தி இலாக்காவின் பட்ஜெட் அறிக்கை தனியே வெளிவந்தது.

பொது பட்ஜெட்டின் கடுமையைக் குறைத்துக் காட்ட இந்தப் புதிய முறை மேற்கொள்ளப்பட்டிருக்கலாம். இணைந்து வந்தாலும் பிரிந்து வந்தாலும் மக்கள் தாங்க வேண்டிய சுமை ஆண்டுக்கு ஆண்டு அதிகரிக்கிறதே யொழியக் குறையக் காணோம்.

கார்டு கவர்களின் விலைகளை ஏற்றவில்லையே ? டெலிஃபோன் கட்டணங்களைத்தானே அதிகரித்தோம்? டெலக்ஸ், தந்தி கட்டணங்களைத்தானே கூட்டினோம் என்று வாதாடுவதில் பொருள் இல்லை. சாமானியரும் டெலிஃபோன் போன்ற சாதனங்களைப் பயன்படுத்தும் நாளை நோக்கி நாம் முன்னேற வேண்டும். மாறாக வசதி உள்ளவரும் ஃபோனைத் தொடப் பயப்படும் நிலை நோக்கிச் செல்கிறோம். பெரிய நிறுவனங்களில் டெலிஃபோன், டெலக்ஸ் கட்டண உயர்வால் செலவுகள் கூடினால் அது, அங்கே உற்பத்தியாகும் பண்டங்களின் விலைகளில் விரைவில் பிரதிபலிக்கவே செய்யும். இறுதியில் பாதிக்கப்படுகிறவர் பண்டம் வாங்கும் பாமரர்தான்.

ரயில்வே பட்ஜெட்டிலும் இவ்வாறே பயணிகள் கட்டணத்தை அதிகரிக்கவில்லை என்று தம்மைத் தாமே தட்டிக் கொடுத்துக் கொண்டு விட்டார் அமைச்சர். ஆளும் கட்சியின் பாராளுமன்ற உறுப்பினர் பலரும் கரகோஷம் செய்து வரவேற்றுவிட்டார்கள் இந்த அறிவிப்பை. ஏதோ அந்த மட்டில் பிழைத்தோம் என்றுதான் சாமானியனும் நிம்மதிப் பெருமூச்சு விடுவான், ஏற்கனவே உயர்ந்த கட்டணங்கள் இன்னும் ஒரு மாமாங்கத்துக்குக் காணும் என்பதை மறந்து.

அவன் நிம்மதி நீண்ட நாள் நிலைக்காது. பண்டங்கள் பலவற்றின் சுமை கூலியை ரயில்வே கணிசமாக உயர்த்தியிருக்கிறது. இதன் விளைவை விலைவாசி உயர்வாக அவன் சீக்கிரமே உணர்வான். இதிலும் அத்தியாவசியப் பண்டங்களின் சுமை கூலியை உயர்த்தவில்லை என்று அமைச்சர் கூறுகிறார். ஆனால் துணிமணிகளும், பழங்களும், காய்கறிகளும், மண்ணெண்ணெயும், நிலக்கரியும் அத்தியாவசியப் பண்டங்கள் அல்ல என்று எப்படிச் சொல்வது ?

மேலும் அத்தியாவசியப் பண்டங்கள் மட்டும்தான் மக்கள் வாங்குவது என்று ஏற்பட்டால் தொழில் வளப் பெருக்கம் என்ற

தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற - எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

சொற்றொடருக்கே பொருள் இல்லாமல் போய்விடும்.

ஐந்நூறு கிலோமீட்டருக்கு அதிகமாக அனுப்பப்படும் பொருள்களுக்கு ஏற்கனவே உள்ள சர்சார்ஜ் 22 சதம். இப்போது மேலும் 10 சதம் அதிகப்படி சர்சார்ஜ் விதிக்கப்பட்டுள்ளது.

சுண்டைக்காய் கால் பணம் சுமை கூலி முக்கால் பணம் என்ற பழமொழியைப் பொய்த்துப் போக விடலாமா ?

# வளரவிட்டால் விடமாட்டேன்...!

இந்தி ஆதரவாளருக்குச் சொன்னால் கோபம்வரும். நமக்கோ சொல்லாமல் தீராது!

ஆயிரம் தலைப்புக்களில் மூன்று கோடி ரூபாய் பெறுமானமுள்ள ஹிந்தி பாட புத்தகங்களைத் தயாரித்தார்கள். விற்கவில்லை; தூசி படிந்து கிடக்கிறது. கரையான் அரிக்கத் தொடங்கும் நாள் வெகுதூரத்தில் இல்லை.

பாட புத்தகங்களின் மதிப்பு மூன்று கோடி. அவற்றைத் தயாரிக்க ஹிந்தி கிரந்த அகாடமிகள் என்றும், விஞ்ஞானச் சொற்களுக்கு ஹிந்தி வார்த்தைகளை உருவாக்கும் கமிஷன் என்றும் நியமித்துப் பலருக்குப் பல ஆண்டுகளாகச் சம்பளம் கொடுத்து வருகிறார்களே அது தனிக் கணக்கு !

ஆயிரம் தலைப்புக்களில் புத்தகம் போட்டாலும் ஹிந்தி பேசும் மாநிலங்களிலேயே பல்கலைக் கழகங்கள் ஏற்றவை இருநூறு மட்டுமே. அந்த இருநூறும் முழுசாக விற்பனையாகவில்லை.

விற்காத புத்தகங்களைப் பாதி விலைக்குத் தர இப்போது முன்வந்திருக்கிறார்கள். எல்லா நஷ்டமும் ஒட்டுமொத்தமாகச் சேர்ந்து யார் தலையில் விடியும் ? திருவாளர் பொதுஜனத்தின் திருத்தலையில்தான்.

மொழியை வளர்கிறதா இல்லையா, வளராவிட்டால் விடமாட்டேன் என்று வற்புறுத்தி வளரச் செய்ய முடியுமா ?

வைட்டமின்கள்கூட அளவுக்கு அதிகமானால் ஆபத்து என்று இக்கால மருத்துவம் கூறுகிறது. ஹிந்தி விழுங்குவதோ வைட்டமின் 'ப'

# டெலிவிஷன் கதை

மூன்றரை லட்சம் டெலிவிஷன் செட்டுகளைத் தயாரிக்க அரசாங்கம் அனுமதி வழங்கி உள்ளது. ஆனால் தயாரானவை 90,000 தான். இவற்றையும் வாங்குவோர் இல்லை. கடைகளில் கேட்பாரற்றுக் கிடக்கின்றன. டெலிவிஷன் ஒலிபரப்பு நிலையங்களின் எண்ணிக்கை அதிகரித்தும் பயனில்லை.

காரணத்தை உணர்வது கடினமல்ல. ஒரு டி. வி. செட்டின் விலை நாலாயிரம் ரூபாய். ஆனால் தயாரிப்புச் செலவு லாபம் உள்பட ரூ. 2700தான். மீச்சம் ரூ. 1300 வரி.

ரூ. 2700 தயாரிப்புச் செலவையும் ரூ. 1500 ஆகக் குறைக்க முடியும். அதிகமான டி.வி செட்டுகள் விற்பனையானால். உற்பத்தியாகும் பண்டத்தின் எண்ணிக்கை அதிகரிக்கும்போது சராசரி உற்பத்திச் செலவு குறையும். அதோடு குறைந்த லாபத்தில் அதிக செட்களை விற்று மொத்தத்தில் வருவாய் குறையாமல் பார்த்துக் கொள்ளலாம்.

வரியைக் குறைத்தால் அதிக செட்கள் விற்பனையாகும். அதிக செட்கள் விற்பனையானால் அடக்க விலை குறையும். விற்பனை எண்ணிக்கை கூடுதலால் வரி வருவாயும் அதிகரிக்கவே செய்யும்.

இதே போன்ற நிலைதான் பல்வேறு பண்டங்களின் உற்பத்தியிலும் இருக்கிறது. ஆக, ஒளிமயமான எதிர்காலத்துக்கு ஸ்விட்சைப் போட வேண்டியது யார் என்பது புரிகிறது அல்லவா ?

ராஜாஜி சிந்தனை

## தாயாகும் தாவரங்கள்

நமக்குக் கெட்ட காற்றாக இருப்பது தாவரங்களுக்கு நல்ல காற்றாகும். நமது கழிவுக் காற்றை மரங்கள் சுவாசித்து அதிலுள்ள கரியைப் பிரித்து அதைத் தம் உடலில் சேகரித்து வைத்துக் கொள்கின்றன. அதையேதான் நாம் மறுபடியும் நமது உணவாக உபயோகித்துக் கொள்கிறோம். நாம் உண்பதில் ஒரு பகுதியையே ஜீரணிக்கிறோம். எஞ்சியதை வெளியே கழித்துவிடுகிறோம். அந்தக் கழிவு பூமியில் சேர்கிறது. பூமி அதை உறிஞ்சிக் கொள்கிறது. அதன்பின் தாவரங்களின் வேர்கள் அதைக் கிரகித்து அதைப் பயன்படுத்தி நமக்கு வாழை, தக்காளி, மா முதலிய பல நல்ல உணவுகளை அளிக்கின்றன.

தாவரங்களுக்கும் மக்களுக்கும் உள்ள தொடர்பு, தாய்க்கும் குழந்தைக்கும் உள்ள தொடர்பு போன்றதாகும். நாம் கெட்டதென்று எதை எறிந்து விடுகிறோமோ அதைத் தாவரங்கள் தாயைப் போல் நல்ல பொருளாகச் செய்து நமக்குத் திரும்ப அளித்துவிடுகின்றன. ஆதலால் உலகத்தின் வாழ்வில் தாவரங்கள் எத்தகைய முக்கியமான ஸ்தானத்தை வகிக்கின்றன என்பதை அறிந்து கொள்ளலாம்.

—மரங்களும் செடிகளும் என்ற கட்டுரையில்

# உங்கள் குழந்தைக்கு 3 மாதங்களாகிவிட்டதா?

டாக்டர்கள் கூறுகிறார்கள்,
3 மாதங்கள் ஆனவுடன், உங்கள்
குழந்தைக்குப் பால் மட்டும் போதாது.
உங்கள் குழந்தைக்கு, ஆரோக்கியமான
இரத்தத்திற்குத் தேவையான போதிய
இரும்புச்சத்து நிறைந்த
திட உணவு தேவை.



போதிய இரும்புச்சத்து நிறைந்த ஒரே திட உணவு—பாரெக்ஸ், கொடுங்கள் அவனுக்கு.

அதோடு, அவனுடைய தேவைக்கேற்ப, உங்கள் குழந்தையின் உணவில் தானிய உணவின் அளவை அதிகரிக்க உதவுவது பாரெக்ஸ் ஒன்றுதான்.

இதோ வளரும் உங்கள் குழந்தைக்கு பாரெக்ஸ் வழங்கும் நன்மைகள்:

வளர்ந்து வரும் உங்கள் குழந்தைக்குத் தேவையான பாரெக்ஸ் அளவு:

| உங்கள் குழந்தையின் வயது | பாரெக்ஸ் அளவு |
|---|---|
| 3-6 மாதங்கள் | 1-2 தேக்கரண்டி, தினசரி இரு முறை |
| 6-9 மாதங்கள் | 3-4 தேக்கரண்டி, தினசரி மும்முறை |
| 9 மாதங்கள்-3 வயது | 4-6 தேக்கரண்டி, தினசரி நான்கு முறை |

46-172. TM






# பாரெக்ஸ்

க்ளாக்ஸோ

# பாரதமே போற்றும் வகையில் ஸ்ரீ மஹாபாரதம்

## ஸ்ரீ ந்ருஸிம்ஹ ப்ரியா அளிக்கும் மற்றோர் அரிய வாய்ப்பு




1975 ஏப்ரல் முதல் ஸ்ரீ ந்ருஸிம்ஹ ப்ரியாவில் வ்யாஸ பாரதம் எளிய தமிழில் மொழி பெயர்த்து ப்ரசுரமாகி வருகிறது. சிறியவர்கள்கூட இதைப் படித்து மகிழ்கின்றனர். பல பெரியவர்கள் இதைப் பற்றி மிகவும் பாராட்டி எழுதி வருகிறார்கள்.

மஹாபாரதம் மிகச் சிறந்த முறையில் வெளியாகிவரும் விஷயத்தை அறிந்த பலர் புதியதாக மெம்பராக விரும்புகிறார்கள். இவர்கள் ஆரம்ப முதலே தங்களுக்கு மஹாபாரதம் வேண்டுமென்கின்றனர். வேண்டிய அளவே காபிகள் அச்சிடப்பெறுவதால் பழைய காபிகள் கிடைப்பது அரிது. புதியதாகச் சேர விரும்புகிறவர்களுக்கும் மஹாபாரதம் முதலிலிருந்தே கிடைக்க வழி செய்யவேண்டும் என்கிற நோக்கத்துடன் 1975 ஏப்ரல் முதல் 1976 மார்ச் வரை ப்ரசுரமாயிருக்கும் மஹாபாரதப் பகுதியைத் தனிப்ரதியாக அச்சிட்டு வழங்கத் தீர்மானித்திருக்கிறோம். 368 பக்கங்கள் கொண்ட இதன் விலை 10 ரூபாய்.

1976 ஏப்ரல் முதல் மெம்பராக விரும்புகிறவர்கள் வருஷச் சந்தாவான 15 ரூபாயும் தனி ப்ரதியின் விலையான 10 ரூபாயும் சேர்ந்து 25 ரூபாய் அனுப்பவேண்டும். ஏப்ரல் மாதம் 15 தேதிக்குள் பணத்தைச் செலுத்தியவர்களுக்கே காபிகள் கிடைக்கும். இந்த அரிய ஸந்தர்பத்தை யாரும் இழக்கவேண்டாம் என்று ஸவிநயம் ப்ரார்த்திக்கிறோம். இந்த மாதிரியான வாய்ப்பு மறுமுறை கிடைப்பது கஷ்டம்.

ஸ்ரீ அழகியசிங்கரின் அருள்மொழி, ஸ்தோத்திரங்கள், பகவத் கீதை, தர்மஸாரம் முதலியன தொடர்ந்து ப்ரசுரங்களாகும்.

வேதங்களிலிருந்து சில அருமையான விஷயங்கள் புதிய வருஷத்திலிருந்து ப்ரசுரங்களாகும்.

ஸ்ரீ ந்ருஸிம்ஹ ப்ரியாவின் வருஷச் சந்தா 15 ரூபாய்
தனிப்பிரதியின் விலை ரூ. 1-50

பணம் செலுத்தவேண்டிய விலாஸம்:
மேனேஜர்
ஸ்ரீ ந்ருஸிம்ஹ ப்ரியா
34 டாக்டர் ரங்காசாரி ரோடு
சென்னை 600 018

# வேத மதத்தின் விசேஷ அம்சங்கள் 6

ஜகத்குரு ஸ்ரீகாஞ்சிகாமகோடி சங்கராசாரிய சுவாமிகள் .....

**ப**லவிதமான தேசங்கள், அவற்றில் பலவிதமான சீதோஷ்ண ஸ்திதிகள், அதற்கேற்ற பயிர்ப் பச்சைகள், இவை எல்லாவற்றுக்கும் அநுகுணமாக அங்கங்கே ஒரு பண்பாடு என்று லோகத்தில் இருக்கிறது. இதில் எல்லாவற்றுக்கும் இடம் கொடுப்பதான வேதம்தான் ஆதியில் எல்லாவிடத்திலும் இருந்திருக்கிறது. பிற்பாடு அங்கங்கே ஜனங்களின் ஆசை அபிலாஷைகள் மாறி மாறி அதிலிருந்தே, அந்தந்தச் சூழலுக்கு ஏற்ற அநுஷ்டானங்களை உடைய வேறு மதங்கள் வந்திருக்கின்றன. அதனால்தான் எந்த மதத்தைப் பார்த்தாலும் இப்போது அநுஷ்டானத்தில் இருக்கப்பட்ட மதங்கள், இந்த மதங்களுக்கு முன்னால் அந்தத் தேசங்களில் இருந்த பூர்விக மதங்கள் இவற்றில் எதைப் பார்த்தாலும் அதிலெல்லாம் வைதிக மதத்தின் அம்சங்கள், சின்னங்கள் இருக்கின்றன. பாரத தேசத்தில் மட்டும் அந்த ஆதி மதமே தங்கிவிட்டது. அதற்கப்புறமும் அது பின்னால் வந்த மதங்களைக் கௌரவ புத்தியுடனேயே பார்த்திருக்கிறது. 'அந்த அந்நிய ஜனங்களின் பக்குவத்தை ஒட்டியே இந்த அந்நிய மதங்கள் தோன்றியிருக்கின்றன. இவையே அவர்களுக்கு சிரேயஸைத் தரும்' என்று கருதியிருக்கிறது. 'தான் வாழ்ந்து மற்றவர்களையும் வாழவிடுவது' (Live and let live) என்று சொல்கிறார்களே அந்த உத்கிருஷ்டமான கருத்தே ஹிந்து மதத்தின் லட்சியமாக இருந்திருக்கிறது. அதோடுகூட மற்ற தேசத்தினருக்கு ஆத்ம சிரேயஸை அளிக்கக்கூடிய பௌத்தம், ஜைனம் முதலிய மதங்களையும் தானே பெற்றெடுத்து வெளிநாடுகளுக்கு அனுப்பி வைத்திருக்கிறது.

ஒவ்வொரு மதத்துக்கும் ஓர் உயிர்நிலை உண்டு. அந்த உயிர்நிலையைப் பிடித்துக் கொண்டு அதையே தளராமல் அநுஷ்டானம் செய்தால் அது நிச்சயமாக சிரேயஸைத் தந்துவிடும். புத்தர் அஹிம்சையை உயிர்நிலையாக வைத்தார். ஏசு அன்பை உயிர்நிலையாக வைத்தார். அஹிம்ஸையும் ஒருவிதத்தில் அன்புதான். ஆனால் கிறிஸ்தவ மதத்தில் பிறத்தியாரை நேசிப்பதை, எல்லோரும் கர்த்தரின் குழந்தைகளாக என்று சேர்வதை ''பாஸிடிவ்'' ஆக வற்புறுத்திச் சொல்லியிருக்கிறது. பௌத்தத்தில் பிறருக்கு ஹிம்ஸையே தராமல் விரக்தியுடன் இருக்கிற 'நெகடிவ்' அன்புக்கு ஜாஸ்தி அழுத்தம் தந்திருக்கிறது. இஸ்லாத்தின் உயிர்நிலை கட்டுப்பாடு. ஜைனத்துக்கு அஹிம்ஸை முக்கியமானாலும், தன் விஷயம் என்று வருகிற போது உடம்பை ரொம்பவும் வருத்திக் கொண்டு விரதாநுஷ்டானம் செய்வது உயிர்நிலையாக இருக்கிறது.

எல்லா மதங்களும் மநுஷ்யனை சம்ஸார துக்கத்திலிருந்து மீட்டு, சாசுவத சௌக்கியத்தைக் கொடுக்க ஏற்பட்டவைதாம். எல்லாவற்றிலுமே அன்பு முக்கியம்தான். அந்த அன்பையே பகவானிடம் வைக்கிற பக்தியாக எல்லா மதமும் திருப்பி விடுகிறது. பௌத்தமும், ஜைனமும் ஸ்வாமியைச் சொல்லாவிட்டாலும் கூட புத்தருக்கும், ஜினருக்கும் பிற்பாடு வந்தவர்கள் இந்த மத ஸ்தாபகர்களையே ஸ்வாமியாக்கி பக்தி செலுத்தத்தான் செய்கின்றனர். ஆகவே பக்தி இல்லாமல் எந்த மதமும் இல்லை.

ஒவ்வொரு மதத்தில் உயிர்நிலையாகச் சொல்லியிருப்பதும் வைதிக மதத்தில் இருக்கிற ஒவ்வோர் அம்சம்தான். அஹிம்சை, அன்பு, கட்டுப்பாடு, விரதாநுஷ்டானம், ஈச்வர பக்தி எல்லாம் நமக்கு முக்கியம்தான். ஆனாலும் இங்கே உயிர்நிலை என்ன என்று கேட்டால், அவனவனும் தனக்கான சாஸ்திர தர்மங்களைத் தானே வாழ்க்கையில் நடத்திக் காட்டுவதுதான். இங்கே ஒவ்வொருத்தனுக்கும் ஒருவிதப்பட்ட கர்மாநுஷ்டானத்தைச் சொல்லியிருக்கிறது. அதை அவனவனும் சுத்தமாக நடத்திக் காட்டியே சிரேயஸை அடைகிறான் என்பதுதான் நம் சாஸ்திரங்களின் தீர்மானம். இந்த விசேஷ அம்சத்தைக் கொஞ்சம் ஆற அமரப் பார்க்கலாம்.

* * *

**இ**துவரை, தத்வ ரீதியில், (Philosophical) வழிபாட்டு ரீதியில் (theological) ஹிந்து மதத்தில் உள்ள விசேஷ அம்சங்கள் சிலதைச் சொன்னேன். இவற்றோடு சமூக ரீதியில் (sociological) நம் மதத்துக்கு என்று ஒரு பெரிய தனியம்சம் இருக்கிறது.

எந்த மதத்தை எடுத்துக் கொண்டாலும் சரி, அதில் ஃபிலாஸஃபி (தத்துவம்), தியாலஜி (தெய்வ வழிபாடு பற்றிய கொள்கை) இரண்டும் வரும். அதோடு சமூக ஒழுக்கம் பற்றியும், தனி மனிதர் ஒழுக்கம் பற்றியும் கொஞ்சம் வரும். அதாவது, ''அண்டை வீட்டுக்காரனைச் சகோதரனாக எண்ணு; விரோதியையும் நண்பனாக நினை; உன்னிடம் மற்றவர் எப்படியிருக்க வேண்டும் என்று நினைக்கிறாயோ அப்படியே மற்றவர்களிடம் இரு; ஜீவகுலத்திடமெல்லாம் அன்பாக இரு; சத்தியமே பேசு; அஹிம்சையைக் கடைப்பிடி'' என்று உபதேசிக்கிற நெறிகள் — Ethics — ஒவ்



# மர்மச் சிறுகதைப் போட்டி

இந்த மர்மச் சிறுகதைப் போட்டியில் அறிமுக எழுத்தாளர்கள் மட்டுமே கலந்து கொள்ளலாம். அதாவது போட்டிக்குக் கதையை அனுப்பும்போது இவர்களது எழுத்து அச்சில் வந்திருக்கக் கூடாது. இதற்கான உறுதிமொழியுடன் தழுவலோ மொழிபெயர்ப்போ அல்ல என்பதற்கான உறுதிமொழியையும் சிறுகதையுடன் இணைக்க வேண்டும்.

| | | |
|---|---|---|
| முதல் பரிசு ... | ... ரூ. | 250.00 |
| இரண்டாவது பரிசு ... | ... ரூ. | 150.00 |
| மூன்றாவது பரிசு | | |
| இரு கதைகளுக்கு ரூ. 100 வீதம் | ... ரூ. | 200.00 |

**முடிவு தேதி: ஏப்ரல் 30உ**

பிரசுரத்துக்கு ஏற்கப்படாத கதைகளைத் திரும்பப் பெறப் போதிய தபால் தலைகள் இணைக்க வேண்டும். கடிதப் போக்குவரத்து கிடையாது. ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.

**ஆசிரியர், கல்கி, சென்னை - 600 031**

வொரு மதத்திலும் இருக்கும். தர்மம், (Morality) எல்லாம் இதில் சேரும். சத்தியம், அன்பு, தியாகம், சேவை போன்ற சிலவற்றைச் சொல்லாத மதம் எதுவுமே இல்லை. ஓரளவுக்கு இதிலேயே, ''ஸோஷியாலஜிகல்'' என்று சொன்னேனே, அந்தச் சமூக அம்சம் இருக்கிறது எனலாம். ஆனால் மற்ற மதங்களில் இது ஓரளவுக்குத்தான் இருக்கிறது. அவற்றில் சமூக வாழ்க்கையின் அமைப்பைப் பற்றிய விஸ்தாரமான பிரஸ்தாவம் கிடையாது. ஆனால் ஹிந்து மதத்துக்கு மட்டும் ''சமூக வாழ்வு அடிப்படை'' (Sociological foundation) ரொம்பவும் கெட்டியாக ஆழமாகப் போடப்பட்டிருக்கிறது. இதிலிருந்துதான் ''வர்ணாச்ரம தர்மம்'' என்ற விசேஷமான அம்சம் உண்டாகியிருக்கிறது.

வர்ண தர்மம் என்பது ஒன்று; ஆச்ரம தர்மம் என்பது வேறொன்று. இரண்டும் சேர்ந்து 'வர்ணாச்ரம தர்மம்' என்றாகிறது. தனி மனுஷ்யன் இன்னின்ன பிராயத்தில் இப்படியிப்படி இருக்க வேண்டும் என்பது ஆச்ரம தர்மம். முதலில், சின்ன வயதில் பிரம்மசாரியாக இருந்து குருகுலத்தில் வித்தியாப்பியாசம் பண்ண வேண்டும்; இரண்டாவது, யௌவனத்தில் கல்யாணம் பண்ணிக் கொண்டு குடித்தனம் நடத்திப் பிரஜா விருத்தி செய்ய வேண்டும். மூன்றாவதாக, வயோதிகம் வந்தவுடன் லோக வாழ்க்கையில் ரொம்பவும் பட்டுக் கொள்ளாமல், வீட்டை விட்டு வனத்துக்குப் போய் வைதிக கர்மாக்களை மட்டும் செய்து கொண்டிருக்க வேண்டும்; அதற்கப்புறம் நல்ல வைராக்கியம் வந்தபின் நாலாவது ஆச்ரமத்தில் இந்த வேத கர்மாக்களைக்கூட விட்டு விட்டு, லௌகிக சம்பந்தங்களை அடியோடு கத்திரித்துவிட்டு, சந்நியாசியாகிப் பரமாத்மாவிடமே மனத்தை ஈடுபடுத்த வேண்டும் — என்று விதிப்பதே ஆச்ரம தர்மம். இந்த நாலு ஆச்ரமங்களுக்கு முறையே பிரம்மசரியம், கார்ஹஸ்த்யம் (க்ருஹஸ்த தர்மம்), வானப்ரஸ்தம், சந்நியாசம் என்று பெயர். இது தனி மனித தர்மம்.

சமூகம் ( society ) முழுவதற்குமான ஏற்பாடுதான் வர்ண தர்மம் என்பது. ''ஜாதி வித்தியாசம், casteism'' என்றெல்லாம் இப்போது ரொம்பவும் கண்டனத்துக்கு ஆளாகியிருப்பது இந்த வர்ண தர்மம்தான்.

இதைப் பற்றி நான் சொல்வதையும், சாஸ்திரங்கள் சொல்வதையும், முன்னேற்றத்துக்கு விரோதிகளான பிற்போக்கு ஸநாதனிகளின் வாதம் என்று தள்ளினாலும் தள்ளிவிடலாம். ஆனபடியால், ''தேசத்தில் இருந்த பேதங்களை, மூட நம்பிக்கைகளையெல்லாம் நீக்கி, பிற்பட்டவர்களை மற்றவர்களுக்குச் சமமாக ஆக்குவதற்கே கங்கணம் கட்டிக் கொண்டிருந்தவர்'' என்று சகலரும் ஒப்புக் கொள்கிற காந்தி இவ்விஷயமாக என்ன சொன்னார் என்று சொல்கிறேன்.

(தொடரும்)

---

[1932ம் வருஷத்திலிருந்து பெரியவர்கள் வழங்கிய உரைகள், ஸ்ரீமுகங்கள், கட்டுரைகளிலிருந்து தொகுத்தது]

# வீட்டு வேலையிலே களைப்படையும் போது ...

## உடனடி சக்தி தருவது க்ளாக்ஸோஸ்-D !

நிமிட நேரங்களில் புத்துணர்ச்சி பெற, க்ளாக்ஸோஸ்-D அருந்துங்கள். குடிநீர், தேநீர், காப்பி, பழச்சாறு ஆகியவற்றிலேயோ, அப்படியே தனிப்படவோ சாப்பிட இனியது. எண்ணற்ற வேலைகளைச் சமாளிக்க உதவும். நடுக் காலைநேரப் பானமாக அருந்தி வாருங்கள்.



நிமிடங்களில் தென்பூட்டுகிறது உடம்பிலே

**க்ளாக்ஸோஸ்-D®**
**க்ளாக்ஸோ தயாரிப்பு**

dCP/GL/33 e. Tam.

## உங்கள் தேவைக்கேற்ற ஒரு முதலீடு திட்டம்!

# வளர்ச்சிமிகு ரொக்க பத்திரங்கள்










இன்று ரூ 603.00 செலுத்தி. ரூ 1000/- பெறுங்கள் 61 மாதங்கள் கழித்து
இன்று ரூ 60.30 செலுத்தி. ரூ 100/- பெறுங்கள் 61 மாதங்கள் கழித்து

# லக்ஷ்மி விலாஸ் பேங்க் லிமிடெட்

| பதிவு அலுவலகம் | நிர்வாக அலுவலகம் |
|---|---|
| 693, ஜவஹர் கடைத் தெரு | 1, பைகிராஃப்ட்ஸ் கார்டன் தெரு |
| கரூர்-639 001 | சென்னை-600 006 |

D. வர்த்தமானன்
சேர்மன்

**LVB... மக்களுக்கான பேங்க்**

KRIPAMA-LVB-122




அத்தியாயம் 23

## நடுவில் சிக்கிய மான்கள்

அரசியல் சதுரங்கத்தில் இரண்டு வகையுண்டு. நேரடியாக இறங்கி உள்ளதை உள்ளபடி சொல்லி, உண்மை, நேர்மை என்று பாடுபட்டு இறுதியில் இருக்குமிடம் தெரியாமல் போவது ;

இன்னொன்று குறுக்கு வழியில் இறங்கி, காய்களை நகர்த்தி, நண்பனையோ உறவினனையோ கொல்ல வேண்டுமென்றால் கொன்று, அரங்கத்தில் நேர்மையாக நடித்து, அந்தரங்கத்தில் வஞ்சகனாகி எந்த வழியில் வெற்றி கிடைக்குமானாலும் அந்த வழியை நாடுவது.

மகாபாரதம் இரண்டுக்கும் உதாரணம் காட்டுகிறது.

நேர் வழிக்குப் பரந்தாமன், குறுக்கு வழிக்குச் சகுனி.

அண்ணனைக் கொன்ற தம்பி; அப்பனைக் கொன்று பட்டத்துக்கு வந்த மகன் - சரித்திரத்தின் ஒவ்வொரு பக்கத்திலும் இவையே மாறி மாறி வருகின்றன.

பதவிக்கு வருவதற்கு இவற்றில் எந்த வழியையும் கையாள்வதற்குத் தயாராக இருந்தான் ரவிவர்மன்.

பத்மாவதி உள்ளே நுழைந்த போது அவன், அவளைப் பார்த்தும் பாராதவன் போல் இருந்தான். அவளும் அதே நிலையில் உட்புறமாகச் சென்றாள். ஆனால் மகிழ்ச்சிப் பெருக்கில் அவள் திளைத்திருப்பதை அவள் முகம் காட்டிற்று.

'கணவன் வெளியில் இருக்கிறான்; சிறையில்

"இல்லை" என்ற ஒன்றே அவனுக்குப் போதுமானதாக இருந்தது.

படைகளில் பெரும் பகுதி தன் வசம் என்ற துணிச்சலில்தான் ரவிவர்மன் வீட்டுக்கே வந்திருந்தான், விடைபெற்றுப் போக.

சிறைச்சாலைக் காவலர்களும் அவன் வசம் இருந்ததால், அது சுலபமாகவும் நடந்துவிட்டது.

சகோதரனின் திறமை, சாகஸம் இவற்றில் தாவணி சகோதரிகளுக்குப் பெருமிதம் இருந்தது. அவன் பட்டத்துக்கு வருவதிலும் அவர்களுக்கு விருப்பம் இருந்தது. ஆனால் யாரை எதிர்த்து அவன் பட்டத்துக்கு வரப் போகிறான்? மார்த்தாண்டவர்மனை !

யார் அந்த மார்த்தாண்டவர்மன்?

அவர்களுக்கு அவனும் ஓர் அன்புச் சகோதரன்.

ரவிவர்மன் சொன்னவற்றையெல்லாம் அவர்கள் கேட்டுக் கொண்டிருந்தார்கள்.

தான் தலைமறைவாகச் செல்வதாகவும், அடுத்து அவர்கள் தன்னை அரசனாகவே சந்திப்பார்கள் என்றும் அவன் சொன்னபோது சாலியூர் தாவணி இடைமறித்து, ''தம்பி மார்த்தாண்டவர்மனின் உயிருக்கு ஒன்றும் ஆபத்து இருக்காதே....'' என்று கேட்டாள்.

''மகுடம் தலையிலே இருக்கிறது. அதை மட்டும் தனியே கழற்ற முடிந்தால் ஆபத்து இருக்காது. தலையையும் சேர்த்துக் கழற்ற வேண்டியிருந்தால்...? அதுவும் பகவதியம்மன் ஆணையாகத்தான் இருக்கும்!'' என்றான் ரவிவர்மன்.

''ஐயோ !'' என்று தன்னை மறந்து கூவி விட்டாள் மூரிநூர் தாவணி.

''நான் அழ விரும்பவில்லை. நான் அழாமல் இருப்பதற்குச் சிலர் அழுது தான் தீரவேண்டும் என்றால், அதை நிறுத்துவது என் கையில் இல்லை. தந்தைக்குப் பிறகு மகனே பட்டத்துக்கு வர வேண்டும் என்பது சம்பிரதாயமாக இருக்கலாம். ஆனால் தகுதியுள்ளவன் வரவேண்டும் என்பதே ஜனங்களின் விருப்பம். எனக்கே தகுதி இருப்பதாக ஜனங்கள் கருதுகிறார்கள்'' என்றான் ரவிவர்மன்.

தாவணி சகோதரிகள் வாய் மூடி மௌனிகளாக இருந்தார்கள்.

எந்த நாடும் நீண்ட நாட்கள் அமைதியாக இருப்பது இறைவனுக்குப் பிடிக்காத காரியம் போலும்!

சேரமான் பெருமான் ஆட்சி முழுவதும் நிம்மதியோடு இருந்த சேர நாடு இனி நிம்மதி இழக்கப் போகிறது!

இது தாவணி சகோதரிகளுக்குப் புரிந்தது. அவர்கள் அரசியல் யோசனை கூறக் கூடியவர்களாக இல்லை. மனத்துக்குள்ளேயே பகவதி அம்மனை வேண்டிக்கொண்டிருந்தார்கள்.

அறையின் உட்புறத்தில் கதவைப் பாதி சாத்தியபடி, அனைத்தையும் கேட்டுக் கொண்டிருந்தாள் பத்மாவதி.



இதில் அவள் செய்யக் கூடியதுதான் என்ன இருக்கிறது?

தோட்டத்து மயிலிடம் ஆட்டத்தின் அழகைத்தான் எதிர்பார்க்க முடியுமே தவிர, நரியின் தந்திரத்தையோ, வேங்கையின் வீராவேசத்தையோ எதிர்பார்க்க முடியாது.

வீட்டுக்கு வந்திருந்த ரவிவர்மன் விடைபெற்றுச் செல்லவந்தவன் தானே! விடைபெற்றுக் கொண்டான்.

ஒரு வீரனை வழியனுப்பும் முறையில் அவர்கள் அவனை வழியனுப்பவில்லை. 'நானை நாம் அழப் போகிறோம்; அந்த அழுகை ஒன்று ரவிவர்மனுக்காக இருக்கலாம்; இல்லையேல், தம்பி மார்த்தாண்ட வர்மனுக்காக இருக்கலாம்' என்பதே அவர்கள் கவலை.

ரவிவர்மன் மாறுவேடம் அணியவில்லை. அசல் ரவி வர்மனாகவே குதிரையில் ஏறினான்.

வாசலில் இருந்த காவலர்கள் சிலரும் தங்கள் குதிரையில் ஏறி அவனைத் தொடர்ந்தார்கள்.

முதலில் அவன் சிறியன் கிறிஸ்தவர்கள் தெருவுக்குச் சென்றான்.

அங்கிருந்த சந்தைப் பெருவெளியில் நின்றான்.

தாரை தப்பட்டைகள் முழக்கி ஒரு சிறு கூட்டம் அவனை வரவேற்றது. அவர்கள் சிறியன் கிறிஸ்தவர்கள் அல்ல; சேர நாட்டுக்காரர்களே.

சிறியன் கிறிஸ்தவர்கள் அங்கே கூடத் தொடங்கினார்கள். ரவிவர்மன் சிறைப்பட்ட செய்தியை அறிந்த அவர்கள் அவனை அங்கே கண்டதும் திகைப்படைந்தார்கள்.

''எனது கிறிஸ்தவ சகோதரர்களே, சேர நாட்டில் நீங்கள் குடியேறிப் பல ஆண்டுகள் ஆகி விட்டன. அரபிக் கடலில் மிதந்து வந்த உங்கள் மூதாதையரின் கப்பலைக் கூட நீங்கள் மறந்து போயிருப்பீர்கள். வாணிபத்துக்காக வந்த உங்களை வரவேற்று இருக்கை தந்தது சேர நாடு. இருக்கை தந்ததே தவிரச் சேர நாட்டில் உங்கள் பங்கு என்ன? நீங்கள் வெறும் சந்தை வணிகர்கள்தானா? நான் ஆட்சிக்கு வந்தால் உங்களில் ஏழைகளாக உள்ளவர்களுக்கு ஆளுக்கு ஒரு வீடு கொடுப்பேன். அரசியலில் இடம் கொடுப்பேன். இந்த நாட்டு மண்ணின் மைந்தர்களுக்கு என்னென்ன உரிமைகள் உண்டோ அத்தனை உரிமைகளையும் நான் தருவேன். சிறியன் கிறிஸ்தவர்கள் தங்களுக்கு என்று ஆல



யம் கட்டிக் கொள்ள வஞ்சியின் ஓரமாக நூறு காணி நிலத்தை உடனடியாக வழங்குவேன். எனக்கு நீங்கள் பதில் சொல்ல வேண்டாம். யோசித்துப் பாருங்கள்!''

உண்மையில் அவன் அவர்கள் பதிலுக்காகக் காத்திருக்கவில்லை. குதிரையில் இருந்தபடியே பேசினான்; குதிரையைத் தட்டிவிட்டுக் கிளம்பினான்.

அராபியர் தெருவுக்குக் குதிரை சென்றது. அங்கேயும் அவனை வரவேற்கச் சிலர் காத்திருந்தார்கள். அவர்களும் சேர மக்களே!

மக்கள்! அவர்கள் மிகவும் நல்லவர்கள். இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு மேலாக என்ன செய்கிறோம் என்பது புரியாமலேயே அவர்கள் இயங்கி வந்தார்கள். அதற்கு முன்னிருந்த மக்களைப் போலவே எட்டாம் நூற்றாண்டிலிருந்த மக்களும் இருந்தார்கள். அவர்கள் முன்னிலையில் ரவிவர்மன் குதிரை நின்றது. அவனைச் சுற்றிலும் அவனது காவலர்களும் நின்றார்கள். ஆச்சரியத்தோடு அராபியர்கள் கூடிவிட்டார்கள்.

''ஓ அராபியர்களே! உங்கள் கப்பல்களும் அராபிக் கடல் அலைகளிலேதான் மிதந்து வந்தன. நீலக் கடல் அலையில் நீந்தி வந்த உங்களைக் காலக் கடலில் கரை சேர்க்க நான் வந்துள்ளேன். வளமிருந்த சேர நாட்டு மண்ணின் குடிமக்களாக உங்களை ஏற்றுக் கொண்டது சேர நாடு. இனி உங்களைச் சேர நாட்டு அமைச்சர் பிரதானிகளாக ஏற்றுக் கொள்வது என் பொறுப்பு. நான் சமயங்களைக் கடந்தவன். சமயத்துக்குத் தகுந்தாற்போல் பேசி அறியாதவன். ஒரு பாவமும் அறியாத, ஒரு திறமையும் இல்லாத மார்த்தாண்டவர்மனை ஆட்டிப் படைக்கிறார் நாராயண நம்பூதிரி. நம்பூதிரிகளின் அதிகாரம் இங்கே இருக்கும் வரை பிற சமயத்தவரின் எதிர்காலம் இருளடைந்தே இருக்கும். மகுடத்தை என் தலையில் ஏற்றுங்கள். அரண்மனை வாசலை உங்களுக்காகத் திறந்து வைக்கிறேன். நீங்கள் எனக்குப் பதில் சொல்ல வேண்டாம். யோசித்துப் பாருங்கள்!''

ரவி வர்மன் குதிரை புறப்பட்டு, யூதர்கள் தெருவுக்குச் சென்றது.

அங்கேயும் இதேமாதிரி ஒரு நாடகம்!

யூதர்களின் வரலாற்றைப் பற்றி, சமய அபிமானத்தைப் பற்றி அங்கேயும் சொற்பொழிவு நிகழ்த்தினான் ரவிவர்மன்.

அராபியர் தெருவிலும், சிறியன் கிறிஸ்தவர் தெருவிலும் நடைபெறாத ஒரு சம்பவம் இங்கே நடைபெற்றது.

யூத வணிகர்களிடம் சேர்த்து வைத்திருந்த ஒரு பொன் முடிப்பை யோகோவா அவனிடம் அளித்தார். ரவி வர்மன் புறப்படும்போது



## வர்த்தக ஒலிபரப்பு, வற்றாத கிளுகிளுப்பு!

● விசேஷத் தேன் கிண்ண நிகழ்ச்சிக்கு அன்று டைரக்டர் பாலசந்தர் கலந்து கொள்ள வந்திருந்தார். அவர் தயாரித்துள்ள 'ஸ்கிரிப்டை' நிகழ்ச்சித் தயாரிப்பாளர் ஆண்டியப்பன் மூன்று நான்கு தடவை திருப்பித் திருப்பி வாசிக்கச் சொன்னார்.

''ஐயா! நான் பல படங்களை இதுவரை 'டைரக்ட்' செய்து வந்திருக்கிறேன். நீங்கள் என்னை 'டைரக்ட்' செய்துவிட்டீர்கள்!'' என்றார் பாலசந்தர் சிரித்துக் கொண்டே.

● விவித பாரதியில் தயாரிப்பாளராகப் பணியாற்றிய திரு எம். எஸ். பெருமாள் முன்னாள் சம்பவத்தை நினைவுகூர்கிறார்:

''வீட்டுக்கு வீடு'' என்ற நாடகம். அந்த நாடகத்தில் அன்னபூரணி என்ற பாத்திரத்தை மனோரமா ஏற்று நடித்தார். அதே நாடகத்தில் அடம் பிடிக்கும் சிறுவன் பாத்திரம் ஒன்றும் உண்டு. ஒரு சிறுவனைத் தேடிப் பிடிக்க வேண்டுமே என்று கவலைப் பட்டுக் கொண்டிருந்தேன். 'கவலைப்படாதீங்க. ரேடியோவில் குரல் மட்டும்தானே ஒலிக்க வேண்டும்? நானே அதைச் சமாளித்து விடுகிறேன்' என்றார் மனோரமா. அந்தச் சிறுவனின் குரலையும் அவர் திறமையாகக் கையாண்டது எங்களை வியப்பில் ஆழ்த்தியது!

''அதுமட்டுமா? மனோரமா இதுவரைக்கும் படங்களில் நடித்த ஜாம்பஜார் ஜக்கு, ஜில் ஜில் ரமாமணி, பாண்டிச்சேரி மாமி முதலிய பாத்திரங்கள் நடிகை மனோரமாவைப் பேட்டி காண்பதாக ஒரு நிகழ்ச்சி. அத்தனை கதாபாத்திரங்களாகவும் மனோரமா ஒரே சமயத்தில் பேசி 'நகைச்சுவைச் சிறப்புத் தேன் கிண்ணம்' அபார வெற்றி பெறச் செய்தார்.

● ''அந்த ரேடியோவைக் கொஞ்சம் நிறுத்தித் தொலைக்கிறியா?'' என்று சினிமாப் பாட்டுப்

யோகோவாவிடம் மெதுவாக ''மதுரையில் பூஜியானு பத்திரமாக இருக்கிறுன்!'' என்று சொல்லிவிட்டுப் புறப்பட்டான்.

வஞ்சியின் எல்லை ஓரமாகச் சேர மக்கள் பெரும் திரளாகக் கூடியிருந்தார்கள். ரவி வர்மனுக்கு ஆதரவான சேனு வீரர்களும் அங்கே கூடியிருந்தார்கள். அங்கே அவனுக்குப் பெரும் வரவேற்பு நிகழ்ந்தது. அவன் ஒவ்வொருவரையும் கட்டித் தழுவினுன். கன்னத்தைத் தட்டினுன். அதில் ஒரு பெண்ணுக்குக்கூட இல்லாத சாகஸம் அவனுக்கு இருந்தது. அங்கே பேசும் பொழுது அவனது தொனியும் வேறு விதமாக இருந்தது.

''வஞ்சியின் மக்களே! கொஞ்சும் மலேயாளக் கொடுந் தமிழ் மொழியில் மழலே பேசும் சேர மக்களே! வந்தவன் வாழ, இருப்பவன், சாவதா? குதிரை வணிகத்துக்கு அராபியர்கள்; நவமணி வணிகத்துக்கு யூதர்கள்; மற்ற அத்தனே பொருள்களுக்கும் சிறியன் கிறிஸ்தவர்கள். வாயும் வயிறும் காயக் காயக் காயும் கறியும் விற்பதுதான் வஞ்சி மக்கள் தலேயெழுத்தா? அவர்கள் மீது எனக்குப் பகையில்லே. அந்தப் பகை உங்களுக்கும் இருக்க வேண்டாம். வந்தவர்கள் ஆளுலும், அவர்களும் நம் சொந்தக்காரர்களே. ஏமாந்து போன உங்கள் வாழ்வில் புதிய விளக்கேற்றுவதே நமது பணி.

''பத்தினிக்கோட்டத்துப் பகவதியம்மன் மீது ஆணே. சத்தியம் தழைக்க, தர்மம் நிலேக்கவே நான் மகுடத்தை நாடுகிறேன்! மார்த்தாண்டவர்மன் நம்பூதிரிகள் சபையின் கைப் பாவை. மாணிக்கத் தேரேறி மரகதப் பூங்கா அடைந்து, ஆணிப்பொன் ஊஞ்சலிலே ஆடி விளேயாடி, காணிக்கை வரும் பொருளில் கண் மூடி ஆடுகின்றுன். கிராமச் சபைகளுக்கு நம்பூதிரிகளே தலேவர்களாக இருக்க வேண்டும் என்பது என்ன விதி! முதலாம் சேரமான் பெருமாளுக்கு முந்திய சேரமான், நம்பூதிரிகளின் கிராம சபை ஆட்சியை ஏற்றுக் கொண்டதில்லே. அதனுல் அவர் பட்ட பாட்டை வரலாறு கூறுகிறது. பொறையர் பரம்பரைக்கும், குட்டுவர் பரம்பரைக்கும் இல்லாத பெருமை இவர்கள் பரம்பரைக்கு எப்படி வந்தது? ஆட்சி முறையையே நான் மாற்றுவேன். அரச தர்மத்துக்காக நான் பாடுபடுவேன். சூழ்ச்சிகளே நான் அறியேன். உங்கள் துணேயையே வேண்டினேன்!''

ரவிவர்மன் பேசி முடித்ததும் மக்கள் கை தட்டினுர்கள். அவர்கள் எப்பொழுதும் தட்டுவார்கள்! ஆண்டவன் அவர்களுக்குக் கைகளேக் கொடுத்ததே தட்டுவதற்காகத்தானே!

அங்கிருந்து ஆயிரக்கணக்கான வீரர்களுடன் கொல்லி நகர், சேனே இருக்

---

பிடிக்காதவர்கள் சிறுவது உண்டு. ஆனுல் பெரும்பாலானேருக்கு வர்த்தக ஒலிபரப்பு வற்ருத கிளுகிளுப்புத் தருவதாகவே உள்ளது.

விவித பாரதி ஒரு நாளேக்குப் பதின் மூன்று மணி நேரம் ரேடியோவில் கேட்கிறது. ஹிந்தி நிகழ்ச்சிகள் தவிரத் தமிழ் ஒலிபரப்புக்காக நாலு மணி நேரம் ஒதுக்கப்பட்டுள்ளது. கிட்டத்தட்ட பதினுறு லட்சம் மக்கள் இந்த ஒலிபரப்பைக் கேட்கிறுர்கள்.

● விவித பாரதி தமிழ் ஒலிபரப்பில் 'தேன் கிண்ணம்' பிரபல்யமான நிகழ்ச்சி. இந்த நிகழ்ச்சியின்போது விளம்பரதாரர்கள் பங்கு கொள்ள மிகவும் பிரியப்படுகிருர்கள்.

விவித பாரதியில் ஒரு நாளேக்கு இடம் பெறும் விளம்பரங்கள்: 150.

ரஸிகர் தேன் கிண்ணத்துக்கு நேயர்களிடமிருந்து வரும் நிகழ்ச்சிக்குறிப்புக்கள் மாதம்: 190.

'உங்கள் விருப்பம்' பகுதியில் கலந்து கொள்ளும் ரஸிகர்கள் மாதம்: 7932.

7 செகண்ட் விளம்பர ஒலிபரப்புக்குக் கட்டணம்: வார நாட்களில் ரூ. 45; ஞாயிறு அன்று ரூ. 60. (சூப்பர் 'ஏ' கால நிகழ்ச்சி.)

30 நிமிஷம் விளம்பரதாரர் வழங்கும் நிகழ்ச்சிகளுக்குக் கட்டணம்: வார நாட்களில் ரூ. 1200; ஞாயிறு அன்று ரூ. 1750.

இந்த இதழ் அட்டைப் படத்தில் விவித பாரதி நிகழ்ச்சிகளே ஒலிபரப்பும் பணியில் ரேடியோ நிலேயத்தில் ஈடுபட்டுள்ள பெண்மணியைக் காணலாம்.

வண்ணப் படம்: **அன்பில் தேவதாஸ்**

கட்டுரை: **பி. எஸ். எம்.**



கைக்குச் சென்று, அதனைக் கைப்பற்றிக் கொண்டான் ரவிவர்மன்.

ரவிவர்மன் தப்பிவிட்ட செய்தியறிந்த நாராயண நம்பூதிரி, ராஜ விசுவாசம் மிக்க சேனைகளை மார்த்தாண்ட வர்மனின் அரண்மனையைச் சுற்றிலும் நிற்க வைத்தார். கிராம சபைகளுக்குத் தூதுவர்களை அனுப்பினார். கிராமங்களில் இருந்த காவலர்களுக்குத் தலைமை தாங்கி, கிராம சபைத் தலைவர்கள் வஞ்சி நோக்கி நடந்தார்கள்.

வஞ்சி நகரம் பரபரப்படைந்தது.

கிணறுகள் இல்லாத வீடுகளில் இருந்து வேக வேகமாக வெளியேறி ஓடைத் தண்ணீரைக் குடங்களில் ஏந்திப் பல பெண்கள் வீடுகளில் கொண்டு வந்து வைத்துக் கொண்டார்கள். கதவுகள் தாழிடப்பட்டன. உள்நாட்டுப் போருக்கு வஞ்சி நகரம் தயாராயிற்று.

நாராயண நம்பூதிரி மரணத்தைச் சந்திக்கவே தயாரானார்.

பரசுராமனின் ரத்தம் பழைய வேகத்தோடு துள்ளி எழுந்தது.

ஒவ்வொரு இமைப் பொழுதும் என்ன நடக்குமோ என்று நகரம் எதிர்பார்த்தது.

பொறுமை இழந்த நாராயண நம்பூதிரி, நம்பூதிரிகள் மண்டபத்துக்கும் அரண்மனைக்குமாக மாறி மாறிக் காவலர்களோடு பறந்து கொண்டிருந்தார்.

மார்த்தாண்டவர்மனுக்குப் பாதுகாப்பைப் பலப்படுத்திவிட்டு, அவர் நம்பூதிரிகள் மண்டபத்துக்குள் நுழைந்தபோது, மதுரைக்குச் சென்றிருந்த சங்கரன் நம்பூதிரி கையைப் பிசைந்தபடி நின்று கொண்டிருந்தார்.

''என்ன ஆயிற்று ?'' நாராயண நம்பூதிரி கேட்டார்.

''உயிர் தப்பி வந்ததே பெரிய காரியமாயிற்று !'' — சங்கரன் நம்பூதிரி சொன்னார்.

''பூஜியானு அவ்வளவு திறமை உள்ளவளா ?''

''இல்லை. அவள் அண்டியிருந்த தளபதி, அரசமாணிக்கம் அவ்வளவு ஆசையுள்ளவன்.''

''சடையவர்ம பாண்டியனை நீ சந்தித்தாயா ?''

''சந்தித்தேன். எந்த சைவத்தின் மீது அவனுக்குப் பக்தி இருக்கிறதோ, அந்தச் சைவத் திருக்கோலத்திலேயே அவனைச் சந்தித்தேன். சைவ தர்மங்களை அவனுக்குச் சொன்னேன். தளபதி அரசமாணிக்கமும் கூடவே இருந்தான். 'அடிமைப் பட்டுக் கிடப்பதிலிருந்து விடுதலை பெறுவது சைவ தர்மத்துக்கு விரோதமல்ல' என்று அவன் பாண்டியனை நம்ப வைத்துவிட்டான் !''

''பிறகு, என்ன நடந்தது?''

''பாண்டியர் படை புறப்பட்டு வருகிறது. ஆண்டிக் கோலத்தில் நான் முன்னாலேயே வந்துவிட்டேன் !''

நாராயண நம்பூதிரி திகைத்தார் ; அவர் முகம் வியர்த்தது.

ஒரு பக்கம் உள் நாட்டுப் போருக்கான ஆயத்தம்; மறு பக்கம் பாண்டியர் படையை எப்படிச் சமாளிப்பது? கிராமத்துச் சேனைகளும் நகரத்துக்கு வந்து கொண்டிருக்கின்றன. பாண்டியர் படை இடையூறு இல்லாமல் உள்ளே நுழையப் போகிறது.

ஆத்திரம் தாளாத நாராயண நம்பூதிரி ருத்திராட்சத்தை ஓங்கித் தட்டியபோது கொங்கு நாட்டுக்குச் சென்றிருந்த ஜகந்நாத நம்பூதிரி உள்ளே நுழைந்தார்.

பயந்தபடியே அவனைக் கேட்டார் நாராயண நம்பூதிரி: ''என்ன செய்தி?''

''கொங்கர் படை வந்து கொண்டிருக்கிறது !''

''அதுவுமா?''

''கவுட தேவன் நிதானத்தில் இல்லை! எதையும் பேசக்கூடிய நிலையிலும் அவன் இல்லை. நிதானம் இழந்த நிலையில் நாட்டியக்காரி மாதவி நீட்டிய ஓலையில் அவன் கைச்சாத்திட்டான். கவுட தேவனைப் படுக்கை அறையிலேயே மயக்கிய மாதவி கொங்கர் தளபதியையும் தன் உடலழகால் மயக்கினாள். ஆறாயிரம் படை வீரர்களோடு அவளும் வந்து கொண்டிருக்கிறாள் !''

— செய்தியைச் சொன்னார் ஜகந்நாத நம்பூதிரி.

வஞ்சி மக்களுக்கு அந்தக் குரல் கேட்டதோ இல்லையோ, அவர்கள் கண்ணீர் வடித்தார்களோ இல்லையோ, சங்கர நம்பூதிரியும், ஜகந்நாத நம்பூதிரியும் கண்ணீர் வடித்தார்கள். (தொடரும்)



லிஸாவின் ஓவியத்தை அவள் கணவர் வரையச் சொல்லி லியோனார்டோ டாவின்சி வரைந்தார். ஆனால் படம் சரியாக இல்லை என்று சொல்லி அந்நபர் பணம் கொடுத்து வாங்கிப் போக மறுத்து விட்டார். பிறகு அதை பிரான்ஸில் ஒருவர் குறைந்த விலையில் வாங்கித் தம் வீட்டுப் பாத்ரூமில் மாட்டி வைத்திருந்தார். இந்த 'மோனா லிஸா' ஓவியந்தான் இப்பொழுது உலகிலேயே அதிக மதிப்புள்ள ஓவியம்.

—'குழந்தைகள் உலகம்' - பாபு






# உலகெலாம் உணர்ந்து

அயல்நாடுகளில் ஹிந்துக் கோயில்கள் பல உண்டு. ஆனால் அங்கே ஆகம விதிப்படி பூஜைகள் நடத்தக் குருக்கள் கிடைப்பதில்லை.

அந்நாடுகளில் ஹிந்துக் குழந்தைகள் அங்குள்ள பள்ளிகளில் படித்து அங்கு நிலவுகிற நாகரிகச் சூழ்நிலையிலேயே வளர்கிறார்கள். அவர்களுக்கு ஹிந்து மதத்தில் பற்றுதல் ஏற்படச் செய்வது எப்படி?

இது போன்ற பல பிரச்னைகள் அயல்நாடுகளில் வாழும் ஹிந்துக்களுக்கு உண்டு என உணர்ந்து, அவர்களின் பிரதிநிதிகளாகப் பலரைச் சென்னைக்குத் தருவித்து மகாநாடு நடத்தினார் காஞ்சி காமகோடி பீடம் ஜகத்குரு சங்கராச்சாரிய சுவாமிகள்.

1–3–76 அன்று ஐந்து நாள் உலக ஹிந்து மகாநாடு புரசைவாக்கம், தர்மப் பிரகாஷ் மண்டபத்தில் தொடங்கியது.

மகாநாட்டுக்கு இந்தியாவிலிருந்து இரண்டாயிரம் பிரதிநிதிகளும், ஸ்ரீலங்கா, மலேசியா, பிஜித் தீவு, தென்னாப்பிரிக்கா, இந்தோனேஷியா போன்ற கடல் கடந்த நாடுகளிலிருந்து அறுபது பிரதிநிதிகளும் வந்திருந்தனர். தர்மப்பிரகாஷ் மண்டபத்தின் வரலாற்றிலேயே இத்தனை பெரிய கூட்டத்தை யாருமே கண்டிருக்க மாட்டார்கள். ஆனால் இவ்வளவு பெரிய கூட்டம் இருந்தும், பூசலோ கலாட்டாவோ கொஞ்சம்கூட இல்லாமல் ஐந்து நாட்களும் மக்கள் அமைதியாக நடந்து கொண்ட விதம் மிகவும் பாராட்டுக்கு உரியது. ஊசி விழும் சத்தம் கேட்கும் அளவுக்கு நிசப்தம் இருந்தது. ஆனால் ஊசி விழக்கூட இடம் இல்லை! இது விஷயத்தில் ஆசாரிய சுவாமிகளுக்கு ஒரே பெருமிதம்.

ஜகத்குரு ஐந்து நாட்களும் மகாநாட்டில் மிகவும் உற்சாகமாகப் பேசினார். அவரது வேதாந்தக் கருத்துக்கள், ஆன்மீக அறிவுரைகள் ஒருபுறமிருக்க, நடைமுறையில் நாம் கடைப்பிடிக்கத் தவறிய விஷயங்களை அவர் விண்டு வைத்ததைக் கொஞ்சம் பார்ப்போம்.

இலங்கையிலிருந்து வந்துள்ள பிரதிநிதிகள் அங்குள்ள பாட திட்டங்களில் மதங்களைப் பற்றிய போதனை இருப்பதைச் சொன்னார்கள். ஹிந்து மதம் பற்றிப் பாடப் புத்தகத்தில் எழுதப்பட்டிருப்பதைக் காட்டினார்கள். மதச் சார்பின்மை என்ற கொள்கையைக் கடைப்பிடிக்காத நாடுகளில் கூட எல்லா மதங்களும் செழிக்க வாய்ப்பிருக்கிறது — அதாவது அதிகார பூர்வமான மதம் ஒன்றேயானாலும்! நாத்திக வாதமோ அங்கேயெல்லாம் மதிக்கப்படுவதேயில்லை. ஆனால் நாமோ மதச் சார்பின்மை என்பதை மதத்தைப் புறக்கணித்தல் என்று அர்த்தம் பண்ணிக் கொண்டு விட்டோம். மாணவர்களுக்கு இறையுணர்வு ஊட்டுகிற சூழலே பள்ளிகளில் இல்லை. இதற்குக் காரணம் பெற்றோர்களே என்றார் ஆச்சாரியாள். அவர்கள் வீட்டிலே குழந்தைகளுக்கு இறையுணர்வு ஊட்டுகிற கதைகளைக் கூடச் சொல்வதில்லை. பள்ளிகளைப் பற்றி எங்கே கவலைப்படப் போகிறார்கள்? பெற்றோர் விரும்பி வாதாடினால் அவர்கள் கோரிக்கையை அர







# ஓதுதற்கரியவன்!

சாங்கமோ அதிகாரிகளோ புறக்கணிக்க முடியாது.

குறைந்தபட்சம் குடும்பத்தினருடனாவது பற்றுடன் இருக்க வேண்டும். அதிலிருந்து நாட்டுப் பற்று வளரும். மதப்பற்றின் மூலம் அன்பும் அருளும் ஏற்படும்.

ஜகத்குருவின் அருளுரைகள் கடைப்பிடிக்க எளியவை; தரும் பலனில் பெரியவை.

வெளிநாடுகளிலிருந்து வந்துள்ள பிரதிநிதிகள் மகாநாட்டினருக்கு அறிமுகம் செய்து வைக்கப்பட்டனர். அவர்களுக்கு ஜகத்குரு ஆசி வழங்கினர்.

''ஸ்வராஜ்யா'' ஆசிரியர் திரு ஆர். வேங்கடராமன் மகாநாட்டு நடவடிக்கைகளில் ஆரம்ப தினத்திலிருந்தே மிகவும் சிரத்தை எடுத்துக் கொண்டு பெரிதும் அக்கறை காட்டினர்.

மகாநாட்டில் டாக்டர் லோகேஷ் சந்திரா, டாக்டர் வி. ராகவன், ஓய்வுபெற்ற நீதிபதி என். கிருஷ்ணசாமி ரெட்டியார், நீதிபதி எஸ். சூரியமூர்த்தி, டாக்டர் டி. எம். பி. மகாதேவன், திரு சோம. லெ., திரு கண்ணதாசன், அக்னிஹோத்ரம் ஸ்ரீ ராமானுஜ தாத்தாச்சாரியார், பிரதிவாதி பயங்கரம் திரு அண்ணங்கராச்சாரியார், அவ்வை நடராஜன், டாக்டர் பாலசுப்பிரமணியம், திரு பி. எஸ். கைலாசம், திரு கி.வா.ஜ. போன்ற பேரறிஞர்கள் பேசினர்கள்.

மகாநாட்டை யொட்டி, புராண, இதிகாச நிகழ்ச்சிகளையும், நாயன்மார்களின் சரித்திரங்களையும் சித்திரிக்கும் அழகான ஓவியங்கள் காட்சியில் வைக்கப்பட்டிருந்தன. ஆசார்ய ஸ்வாமிகள் அவை அனைத்தையும் பார்த்து மகிழ்ந்து மிகவும் ரசித்தார்; மேற்படி ஓவியக் காட்சிகளை ஏற்பாடு செய்த அமைப்பாளர்களான திரு லக்ஷ்மணய்யர் (ஆனந்தா பிக்சர்ஸ்) மற்றும் திரு வி. எஸ். ஸ்ரீகுமார் ஆகியோரைப் பாராட்டினர்.

மொரீஷியஸ் தீவைச் சேர்ந்த ராமு சூரியமூர்த்தி ஆங்கிலத்தில் அந்நாட்டில் உள்ள ஹிந்து தேவாலயங்களைப் பற்றிப் பேசினர். நூறு ஹிந்துக் கோயில்கள் அங்கே இருப்பதாகவும் கூறினர்.

காஞ்சிபுரம், தொண்டைமண்டல ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ ஞானப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள் அருளுரை வழங்கினர்கள்.

ஐந்தாம் நாள் மாலையில் ஆசாரிய சுவாமிகளுக்குப் பல மொழிகளிலும் (சம்ஸ்கிருதம், தமிழ், மலையாளம், வங்காளி, மகாராஷ்டிரம், ஹிந்தி, தெலுங்கு, கன்னடம் ஆகியவை) வந்தனோபசார நன்றியுரைகள் வாசித்தளிக்கப்பட்டன.

—லோமாஸ்



1. மகாநாட்டு முன் வாசல். 2. மகாநாட்டுக்கு விஜயம் செய்த வெளி நாட்டுப் பிரதிநிதிகளும், பிரமுகர்களும். 3. ஆசார்ய ஸ்வாமிகளும், உடுப்பி பேஜாவர் மடம் ஸ்வாமிகளும். 4. ஸம்ஸ்க்ருத வளர்ச்சிக்கு உதவும் சண்முகநாதன் அறக்கட்டளை நிலையத்துக்கு ஆசார்ய ஸ்வாமிகள் விஜயம். 5. கல்வி காரியாலயத்துக்கு விஜயம் செய்த ஜயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகளைக் கல்வி அதிபர் ஸ்ரீ [illegible] [illegible].



# பொன்னைப் பொழிந்த அன்னை

## ரா. கணபதி

ஆகாயபூபதியின் துயரத்துக் குள்ளேயே ஓர் ஆனந்தம் எழுந்தது. அம்பிகை அவனுக்கு ஓர் ஆண் மகவை அருளி விட்டாள்!

பிரம்மதேவனின் பிரதிநிதியாகக் காஞ்சிபுரத்தின் அரசனாக முடிசூட்டப் பெற்றவன் ஆகாய பூபதி. காஞ்சி காமகோட்டத்தில் குடிகொண்ட ராஜராஜேச்வரியான காமாக்ஷியின் அடிமையாகவே தன்னைக் கருதி ஆட்சி புரிந்தான் அந்த மகராஜன்.

நீண்ட காலம் தர்ம ராஜ்யம் நடத்தி, சலிப்புற்றான். ''அம்மா, இன்னும் எத்தனைக் காலம் இந்த அரச வேஷம்? வாரி வழங்கும் கருணை வாரிதியான நீ என்று எனக்கொரு வாரிசை வழங்கப் போகிறாய்? மகன் பிறந்து, அவனே அரியணை ஏற்றி, நான் உன் அடியிணையை அடையப் போவது எப்போது?'' என்று ஜகன்மாதாவை வேண்டிய வண்ணம் இருந்தான்.

அம்பாள் சோதனை லீலையை நீடித்தாள். ஆட்சியை மறந்து, புத்திரப் பேற்றுக்காகக் காமாக்ஷியிடம் ஓயாத் தவமிருந்தான்.

சந்தர்ப்பத்தைப் பயனுக்கிக் கொண்டு மந்திரி, பிரதானியர் தம்மிச்சைப்படி ஊழல் நிர்வாகம் தொடங்கினர். பொக்கிஷத்தைத் தமக்குள்ளேயே சூறையாடிக் கொண்டனர். நாட்டில் வறுமையும், துர்ப்பிட்சமும் தோன்றின.

கருணாமூர்த்தியான காமாக்ஷி, ஆகாய பூபதியின் பட்டமஹிஷி கருத்தரிக்க அருளினாள். அதே சமயம், நாட்டின் வறுமை தீருவதற்காக மன்னன் மறுபடியும் வருந்தி வேண்டுகிற நிலைமையையும் ஏற்படுத்தி விட்டாள்.

''குழந்தைக்கு நாமகரணமிட வேண்டிய பன்னிரண்டாம் நாளன்று பிரஜைகள் அனைவருக்கும் விருந்துபசாரம் நடத்தவிருக்கிறேன். அதோடு எஞ்சியுள்ள என் கருவூல நிதியம் முழுமையாகச் செலவாகி விடும். அப்புறம் நீ விட்ட வழிதான்'' என்று காமாக்ஷியிடம் முறையிட்டான்.

நாமகரண தின்னாள். அன்னையைத் தியானித்தபடியே பந்தி விசாரித்துக் கொண்டிருந்தான் மன்னன்.

திடுமென ''சோ'' என்று மழை ஓசை! சோ என்றல்ல! கலகல என்று.

ஆஹா! அதிசய மழை! அம்பாளின் கருணை மழைதான்! நீர்த் தூறல்களுக்குப் பதில் பொன் மணிகளே மழையாகப் பொழிகின்றன — காஞ்சி மண்டலம் முழுதும் காஞ்சன வருஷம் பொழிகிறது! திருவருளை வியந்து விதிர்விதிர்த்து நின்ற வேந்தனுக்கு இன்னொரு வியப்பும் காத்திருந்தது.

பன்னிரு நாள் பசுங்குழவி பன்னீர் மழை போல மணக்க, இனிக்கப் பேசியது! ''மழையைப் பார்த்தே மலைக்கிறாயே! மழை பெய்விப்பவளைப் பார்க்க வேண்டாமா? ஆம், சாக்ஷாத் காமாக்ஷியே அதோ அங்கே ஒரு



பந்தியில் சாமானிய ஸ்திரீ போல வந்தமர்ந்து போஜனம் செய்கிறாள். அவளுக்கிட்ட அன்னத்தில் எப்படியோ ஒரு பயறு அளவு பொன்னும் கலந்திருந்தது. அது அவளது திரு உதரத்துள் புகுந்த விசேஷந்தான் இப்படிப் பொன்மழை பொழிகிறது!'' என்றது.

''வா, அவளைக் காட்டுகிறேன்'' என்று கூறி பந்தியிடையே தவழ்ந்து செல்லலாயிற்று.

ஆர்வமயமாக அரசன் பின்தொடர.

''இதோ'' என்று ஓரிடத்தில் சிசு காட்ட, மாயமாக மறைந்து விட்டாள் அங்கே உண்டு கொண்டிருந்த மஹாமாயை!

''வருந்தாதே!'' என்று ஆகாய பூபதியிடம் பரம ஹிதமாகக் கூறிய குழந்தை, அம்பிகையின் உண்கலத்தில் எஞ்சியிருந்த உச்சிஷ்டத்தை எடுத்து உண்டது. ''இந்த சேஷத்தை உண்ட விசேஷத்தால் நானே காமாக்ஷி மயமான உச்சிஷ்ட கணபதியாகி விட்டேன். ஆம், தன் மகன் கணேசனையே தான் உன் மகவாக அம்மா அனுப்பி வைத்தாள். அதனால் இன்று எனக்கு நானே **துண்டீரன்** என்று நாமகரணம் செய்து கொள்கிறேன்'' என்றது தெய்வக் குழந்தை.

துண்டம் என்றால் தும்பிக்கை.

பிற்பாடு துண்டீரன் ராஜ்யபாரம் நடத்தியதால் ''துண்டீர மண்டலம்'' எனப்பட்ட சீமைதான் ''தொண்டை மண்டலம்'' என்றாயிற்று. காஞ்சி காமாக்ஷி ஆலயத்தில் உத்ஸவ காமாக்ஷிக்கு நேரே துண்டீரச் சக்கரவர்த்தி இன்னும் சிலை உருவில் கைகூப்பி நிற்கிறார்.

முஹூர்த்தகாலம் பொன்மழை பொழிந்த அம்பாளை மூககவி தமது ''பஞ்ச சதீ''யில் ''துண்டீராக்யே மஹதி விஷயே ஸ்வர்ண வ்ருஷ்டி ப்ரதாத்ரீ'' என்று போற்றுகிறார். ஊமையான மூகருக்கு வாக்கு மழையைப் பொழிந்தவளும் அவளே தான்.

**ச**கல அநுக்கிரஹங்களையும் வருஷிக்கும் அந்தக் காமாக்ஷியன்னைக்கு வரும் பங்குனி 23-ந் தேதி (ஏப்ரல் 5) கும்பாபிஷேகம் நடக்கிறது. ஆதிசங்கரர் ஆராதித்த மூர்த்தி; அவரே பரிபாலனம் செய்த ஆலயம். நமது கண்கண்ட தெய்வமான காஞ்சிப் பெரியவாளின் இஷ்ட தெய்வம். 1944ல் அவர்கள் காமகோட்டத்துக்கு அற்புதத் திருப்பணியும் குடமுழுக்கும் செய்தார்கள். முப்பதாண்டுகளுக்கொரு முறை ஸாந்நித்யத்தைப் புதுப்பிக்க வேண்டும் என்ற முறைப்படி, பொன் பொழிந்த அன்னைக்கு மீளவும் கும்பாபிஷேகம் செய்யத் தம் பொன்னான உள்ளத்தில் எண்ணினார்கள். அந்த எண்ணத்தைச் செயலாற்றுவதிலேயே ஏகாக்ரதையுடன் இறங்கினார் தொட்டதெல்லாம் பொன்னாக்கும் பூஜ்யஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள். கோபுரங்கள், பிராகாரங்கள், மண்டபங்கள், விமானங்கள் யாவும் திருப்பணி பெற்றுள்ளன. பொன்மழை பெய்தவளுக்கும், அவளது யந்திர ரூபமாகவே ஆதி ஆசார்யாள் ஸ்தாபித்த ஸ்ரீ சக்கரத்துக்கும் பொற்கவசம் செய்து சாத்துவதும் திருப்பணியில் அடக்கமாகும். திருப்பணியும், குடமுழுக்கும் மஹோத்ஸவமும் அமோகமாக நிறைவுற பக்தர்கள் உதவி, அருள் பெற வேண்டும்.

பயறளவு பொன்னுக்குப் பிரதியாக ஸ்வர்ண வருஷத்தையே பொழிந்த பரம தயாளுவான ஸ்ரீ காமாக்ஷி மகாத்ரிபுரசுந்தரிக்கு நாம் செலுத்தும் காணிக்கையைப் போல் அனந்தம் மடங்கு திருப்பி அருளி விடுவாள்.

---

நிதி அனுப்ப வேண்டிய முகவரி:

**காரியதரிசி, காமாக்ஷியம்மன் கும்பாபிஷேகத் திருப்பணிக் கமிட்டி, காமாக்ஷி அம்மன் கோயில், காஞ்சிபுரம்.**








# சூயிங் கம்கள், பபுள் கம்கள்

## படைப்பதிலே முன்னோடிகள்




காலம் எப்படித்தான் பறந்தோடுகிறது. சூயிங் கம்களையும் பபுள் கம்களையும் நாங்கள் தயாரிக்கத் தொடங்கி 35 ஆண்டுகளுக்கு மேல் ஆகிவிட்டது. தொடங்கியபோது நாங்கள் தன்னந்தனி—காரணம், இத்துறையிலேமுதன் முதலில் இறங்கினோம்—முன்னோடியாக. துள்ளியாடிய சேற்றுறையக் கன்றுகள் ஓங்கி வளர்ந்துள்ளனர் இன்று. அவர்கள் நாவிலே விளையாடிய சுகம், இன்று அவர்களின் குழந்தைகளின் நாவிலே விளையாடுகிறது: NP சூயிங் கம்களின், பபுள் கம்களின் சுவை. படைத்த எங்கள் உள்ளம் பரவசம் அடைகிறது. மென்று மகிழும் இன்பத்தை 35 ஆண்டுகளுக்கு மேலாகப் பல நூறாயிரம் நாவுகளிலே ஊறவைத்த பூரிப்பு இது. இந்த 35 ஆண்டுகளிலே நாங்களும் வளர்ந்துள்ளோம்—தரத்திலே, அனுபவத்திலே, பல ரகங்களைப் படைப்பதிலே—தலைமை பெற்றுள்ளோம். இன்று எங்கள் இனிப்புக்களின் வரிசை மிகப் பெரிது.

| | |
|---|---|
| க்ராக்கீஸ் சூயிங் கம்கள் | — பெப்பர்மிண்ட், அன்னாசி, ஆரஞ்சு, டூட்டி ஃப்ரூட்டி, கபாசி சுவையான வகைகள், |
| பபுள் கம்கள் | — டபுள் பபுள் கம், 007 பபுள் கம் மற்றும் உருண்டை வடிவ பால் கம்கள் பரவசமூட்டும் பழச் சுவைகளிலே, |
| பான்பைட் | — இணையில்லாச் சுவையுள்ள க்ரீம் மிட்டாய்கள், |

**NP—ஒன்றுதான் ISI தர முத்திரை பதிந்த சூயிங் கம்கள், பபுள் கம்கள்.**

IS:6747







**சுவைத்து மகிழ ருசிமிக்க வகைகள்**

**தி நேஷனல் பிராடக்ட்ஸ்,** பெங்களூர்.

Dattaram NP-3L TAMIL

# ஒரு நாள்: கே. பாலசந்தர்

இன்று, அதாவது பிப்ருவரி மாதம் இருபத்தியெழாம் தேதி, காலையில் வழக்கத்துக்கு மாறாகக் கொஞ்சம் விச்ராந்தியாக ஒன்பது மணி வரையிலாவது தூங்க வேண்டும் என்றுதான் ஆசைப்பட்டேன். அதற்குக் காரணமும் இருந்தது.

இன்று 'மன்மத லீலை' ரிலீஸாகும் நாள். இதை நண்பர்களுக்கும், மற்றப் படத் துறை சம்பந்தப்பட்ட சிலருக்கும் முந்திய இரவு போட்டுக் காண்பித்து முடிக்கும்போது இரவு வெகு நேரமாகி விட்டது. நான் வீட்டில் வந்து படுத்தபோது காலை மணி இரண்டு. இத்தனைக்கும் அந்தக் காட்சி முடிவடைவதற்குப் பதினைந்து நிமிடங்கள் இருக்கும் போதே நான் சந்தடியில்லாமல் கிளம்பி வந்து விட்டேன். காட்சி முடியும்வரை இருந்தால் 'பாராட்டுகிறேன்' என்று பலர் வந்து சூழ்ந்து கொள்வார்கள். அந்தப் பலரில் சிலருக்கு உதட்டு நுனியிலிருந்து போலிப் பாராட்டுக்கள் வரும். இதையெல்லாம் தவிர்க்க நான் முன்னாலேயே தப்பி வந்துவிடுவேன். பாராட்ட வேண்டும் என்று ஆத்மார்த்தமாக நினைப்பவர்கள் நிச்சயமாகப் போன் செய்வார்கள்.

நான் சற்று அதிகமாகத் தூங்க ஆசைப்பட்டது நிராசையாகி விட்டது. இன்றும் ஆறு மணிக்கே விழித்துக்கொண்டு விட்டேன். வெகு நாட்கள் படித்துப் பரீட்சை எழுதப் புறப்படும் மாணவனின் நிலை.

'மாட்டினி' காட்சி முடிந்து பொதுஜனங்களின் 'ரி-ஆக்ஷன்' தெரியும்வரை எனக்குக் கொஞ்சம் படபடப்பு இருக்கும். இன்றும் அப்படித்தான்!

ஒரு கப் காப்பியைச் சாப்பிட்டு விட்டுப் பத்திரிகையைக் கையில் எடுக்கிறேன். செய்திகளின் தலைப்புக்களைப் பார்க்கிறேன். 'ஸ்போர்ட்ஸ்' பக்கத்தில் எனக்கு அவ்வளவு ஈடுபாடு இல்லை.

'காலையில் கண்டிப்பாக ஒரு மணி நேரமாவது 'வாக்கிங்' போய் வர வேண்டும்' என்று என்னுடைய டாக்டரின் கட்டளை. அவர் இதைச் சொன்ன நாளையிலிருந்தே 'நாளைக்குப் பார்த்துக் கொள்ளலாம்! நாளைக்குப் பார்த்துக் கொள்ளலாம்!' என்று ஒத்திப் போட்டு வருகிறேன். இன்றைக்கும் அப்படித்தான்.



பத்திரிகையைப் புரட்டிக் கொண்டிருக்கும்போதே டெலிபோன் மணி ஒலிக்கிறது. போனைக் கையில் எடுக்கிறேன். நண்பர் ஒருவர் இன்று வெளியாகும் 'மன்மதலீலை' வெற்றிகரமாக ஓடவேண்டும் என்று வாழ்த்துக் கூறுகிறார்.

நான் போனைக் கீழே வைக்கக் காத்திருந்தது போல் மீண்டும் போன் ஒலிக்கிறது. இப்போது பேசுகிறவர், ஆர்வமுள்ள ஒரு நாடக நடிகர். என்னுடைய அடுத்த தயாரிப்பில் இடம் வேண்டி இப்போதே என் காதில் ஒரு வார்த்தை போட்டு வைக்கிறார்.

பத்து மணி சுமாருக்கு நான் டைரக்ட் செய்யும் 'மூன்று முடிச்சுக்கள்' படத்தின் தயாரிப்பாளர்களின் காரியாலயத்துக்குக் கிளம்புகிறேன். இந்தப் படத்தின் தலைப்புக்கும், நான் முன்பு 'கல்கி' இதழ்களில் எழுதி வந்த தொடர் கதைக்கும் சம்பந்தமில்லை. அதே தலைப்பு. ஆனால் வேறு கதை.

ஏற்கனவே, கண்ணதாசன் அவர்களும், எம். எஸ். விசுவநாதன்



தாய்லாந்தில் புதிய கடவுள் தோன்றியிருக்கிறார். அரசி விக்டோரியா! சியாங் மாய் நகரில் பிரிட்டிஷ் தூதரகத்துப் புல்வெளியில் ஆள் உயரத்தில் இருக்கிறது அரசி விக்டோரியாவின் சிலை. 1902ம் ஆண்டிலிருந்தே அங்கு அது இருந்தாலும் நாலைந்து வருடங்களுக்கு முன்னால் உள்ளூர்வாசி ஒருவர் அதை நோக்கி ஏதோ வேண்டப் போக அது பலித்து விட்டதாம். இந்த விஷயம் பெரிதாகப் பரவி, இப்போது சியாங் மாய் மக்களில் நாற்பது சத விகிதத்தினர் 'அரசி விக்டோரியா' தெய்வத்தின் பக்தர்களாகி விட்டார்கள்.

சண்டே டைம்ஸ் - ராமு

---

அவர்களும் அங்கே வந்திருக்கிறார்கள். ஒரு டூயட். அதில் கதாநாயகன் பாடி முடிக்கும் வார்த்தையின் ஓசைக்குச் சமமாக அதே ஓசையில் மற்றொரு வார்த்தையுடன் கதாநாயகி தொடர்ந்து பாட வேண்டும் என்பது என் யோசனை.

இது கவியரசுக்கு ரொம்பப் பிடித்திருக்கிறது. வார்த்தைகளை இழைத்து மெருகேற்றிச் சரமாகக் கோக்கத் தொடங்குகிறார்.

ஆடி வெள்ளி தேடி உன்னை—
நான் அடைந்த நேரம்
கோடி இன்பம் நாடிவந்தேன்
காவிரியின் ஓரம்—

ஆரம்பம் அற்புதமாக அமைந்துவிட்டது. விசுவநாதன் ஒரு டியூன் போட்டு இசைத்துக் காட்டினார். ஆனால் அந்த மெட்டு அவருக்குப் பிடிக்கவில்லை. மீண்டும் முயற்சிசெய்து வேறு பாதையில் புகுந்தார். இது கண்ணதாசனுக்குத் திருப்தி அளிக்கவில்லை!

மூன்றாவது முயற்சியில் எங்கள் மூவருக்கும் மகிழ்ச்சியூட்டும் 'டியூன்' கிடைத்துவிட்டது. அவ்வளவுதான்! பாடலின் அடுத்த வரிகள் கண்ணதாசனிடமிருந்து அமுதமாகக் கொப்பளிக்க ஆரம்பித்து விட்டன.

அங்கிருந்து கிளம்பிக் கலாகேந்திரா காரியாலயத்துக்கு வருகிறேன். மணி பதினொன்றைத் தாண்டிவிட்டிருக்கிறது. ஏ. வி. எம். ஸ்டுடியோவிலிருந்து படத் தொகுப்பாளர் இரண்டு மூன்று தடவை போன் செய்ததாகச் சொன்னார்கள். நான் அவரை போனில் அழைக்கிறேன்.

முதல் நாள் இரவில் படத்தின் மாதிரி ஓட்டத்தைப் பார்த்தபோது அதிலிருந்து ஒருசில வார்த்தைகளை எடுத்துவிட முடிவு செய்தேன். சென்ஸாரால் அனுமதிக்கப் பட்ட வார்த்தைகளானாலும் எனக்கு ஏனோ பிடிக்கவில்லை. அதிகாலையிலேயே அந்த இடத்தை ஒவ்வொரு பிரதியிலும் அகற்றி விட்டு விநியோகஸ்தர்களிடம் ஒப்படைக்கச் சொன்னேன். அதைச் செய்து விட்டதாக அவர் அறிவிக்கிறார்.

சில நிமிடங்களில் மீண்டும் போன் ஒலிக்கிறது. முதல் நாள் இரவு என் அழைப்புக்கிணங்கி வந்து படம் பார்த்த ஒரு நண்பர் பேசுகிறார். குறிப்பாக, நான் எந்த சம்பாஷணையைத் தொகுப்பாளரிடம் எடுக்கச் சொன்னேனோ, அந்த சம்பாஷணை பிரமாதம் என்று பாராட்டுகிறார்! இது ஒரு வாழ்க்கை விநோதம் என்று மனத்துக்குள் ரசிக்கிறேன். அடுத்த தடவை படம் பார்க்கும்போது அந்த சம்பாஷணை இருக்காது என்று நான் இப்போதே சொல்லி அவரை ஏமாற்றத்துக்குள்ளாக்க விரும்பவில்லை.

மற்றொரு நண்பரின் குரல் தொடர்ந்து ஒலிக்கிறது. ''நான் நேற்று மன்மத லீலை படம் பார்த்தேன். ஆனால் அதில் பாலசந்தரைப் பார்க்க முடியவில்லை!'' என்கிறார்.

''இது ஒரு காமெடி சப்ஜெக்ட்! 'அபூர்வ ராகம்' போல் 'ஹெவி சப்ஜெக்ட்'களை மாத்திரம்தானா பாலசந்தரிடம் எதிர்பார்க்கிறீங்க? — அது அபூர்வ ராகம்! இது ஆனந்த ராகம்! அப்படி வைத்துக் கொள்ளுங்களேன்'' என்கிறேன்.

வீட்டுக்குத் திரும்பி வந்து சாப்பிட உட்காரும்போது மணி ஒன்று. சாப்பாட்டை முடித்துக் கொண்டு இரண்டு மணி நேரம் வலுக்கட்டாயமாகப் படுத்துத் தூங்க வேண்டும் என்று ஆசைப்படுகிறேன். அதற்காக 'காம்போஸ்' மாத்திரையையும் போட்டுக்கொள்கிறேன். எப்படியும் 'மாட்னி' காட்சி முடிந்து பொதுஜனங்களின் ரசனையைத் தெரிந்துகொள்ள உதவும் 'போன் கால்கள்' ஆறு மணிக்கு மேலேதானே வரும்!

படுக்கலாம் என்று நினைத்தபோது டெலிபோன் அலறுகிறது. கோயம்புத்தூரிலிருந்து ராஜூ என்பவர் பேசுகிறார். அங்கு காலை பத்து மணிக் காட்சிக்கே ரிலீஸ் செய்து விட்டார்களாம்! அவர் ஒரு விரிவான பாராட்டுக்கு ஆரம்பிக்கிறார்.

எனக்குப் பொறுமை இல்லை. ''டோட்டல் எஃபெக்ட் என்ன? நாலு வார்த்தைகளிலே சொல்லுங்க!'' என்கிறேன்.

''படத்தைப் பார்த்துட்டுக் கொட்டகைக்குள்ளிருந்து வந்தவங்களிலே பலர் மறுபடியும் ரிஸர்வேஷன் கவுண்டரில் போய் நிற்கிறார்கள்'' என்று சொல்லிப் போனை வைக்கிறார்.

எனக்கு வரவிருந்த தூக்கம் போய்விட்டது. கொஞ்ச நேரம் புரண்டு கொண்டிருக்கிறேன். மூன்று மணி வரை இதே நிலை. மூன்று மணிக்கு மிட்லண்ட் தியேட்டர் நிர்வாகியை அழைக்கிறேன். ''ஷோ ஆரம்பிச்சாச்சா? உங்களுக்கு வந்திருக்கும் 'பிரிண்ட்' நல்லா இருக்கா?'' என்று விசாரிக்கிறேன்.

''இன்னும் சரியாக் காயலே! சவுண்ட் கொஞ்சம் டல்லா இருக்கு. போகப் போக நார்மலாகிவிடும்'' என்கிறார் அவர். முதல் காட்சியில் இந்த அனுபவம் எப்போதுமே உண்டு.

உடனே எனக்குப் பிடித்தமான 'சவுண்டை'க் கேட்க ஆர்வம் எழுகிறது. ரிக்கார்ட் பிளேயரில் சிட்டி பாபுவின் வீணை இசைத் தட்டைப் போடுகிறேன். 'வெட்டிங் பெல்ஸ்' (wedding bells) என்ற இசைத் தட்டு

# அன்றும் இன்றும்



நேற்று நிறுவப்பட்டது ஜோதி ஸ்டார்ட்டர்



இன்றே காண முடிந்தது இன்ப நாள்.

முன்னேற்றத்தின் இரகசியம்—

# ஜோதி ஸ்டார்ட்டார்



ஜோதி
ஆயில்-
இம்மர்ஸ்டு
ஸ்டார்ட்டர்



ஜோதி
எய்ர்-பிரேக்
ஸ்டார்ட்டர்

மற்ற ஸ்டார்ட்டர்களைத் திரும்பத் திரும்பப் பழுது பார்க்கவோ, மாற்றிப்போடவோ தேவைப்படும் அதேநேரம் நல்லபடி ஓயாது உழைக்கிறது ஜோதி ஸ்டார்ட்டர். ஜோதி என்றாலே நீடித்த ஆயுள்-பலமுள்ள ஸ்டார்ட்டர். ஸிங்கிள் :.பேஸ், ஓவர்லோடு, தாழ்ந்த வோல்டேஜ் ஆகியவற்றிலிருந்து மோட்டார்களைப் பாதுகாத்து எவ்வித இசைகேடான சேதமும் வராதபடி மோட்டாரைக் காப்பாற்றுகிறது இந்த ஸ்டார்ட்டர்.



**ஜோதி லிமிடெட்**, பரோடா 390 003

*quality is our creed.*

everest 23-r/JY-tm

கிளை: எய்ர்லைன்ஸ் ஓட்டல், 177/179, மவுண்ட் ரோடு, சென்னை. போன்: 85007.
விற்பனையாளர்கள்: வி. வி. & கோ. xxx/613, மகாத்மா காந்தி ரோடு, கொச்சி 682 016;
ராஜும் & கோ., 61, சதி ரோடு, ஈரோடு: மேலக்கடை எலக்ட்ரிகல்ஸ், 215, மெயின் ரோடு,
பெண்ணாடம் 606 105; ஆக்ட ஏஜென்ஸீஸ், நம்பர் 8, நியூ கொழும்பு ஸ்டோர்ஸ், மாயூரம்;
:.பெர்மியர் இண்டஸ்ட்ரீஸ், 80/81, செம்புதாஸ் ஸ்ட்ரீட், சென்னை 600 001;
முருகன் ஆட்டோமேட்டிக்ஸ், காளியம்மன் கோயில் ஸ்ட்ரீட், உசிலம்பட்டி;
ஓரியண்ட் எலக்ட்ரிகல்ஸ், 170, நேதாஜி சுபாஷ் சந்திர போஸ் ரோடு, சென்னை 600 001;
பழனியப்பா டிரேடிங் கோ., 2 ஹெட்குவார்ட்டர்ஸ் ரோடு, கோயம்புத்தூர் 641 018;
ஆட்டோமேட்டிக் பம்ப் ஸ்பெஷலிஸ்ட்ஸ், நம்பர் 4, பாண்டி பஜார், தி நகர், சென்னை 600 017.

# சிங்கார் அழகு, வெறும் சிமிழ் அழகு அல்ல...






## மங்கள திலகமாம்
## குங்குமப் பொட்டழகு

குங்குமத்தின் உண்மையான மதிப்பு அதன் உள்ளமைப்பு. சீரிய விஞ்ஞான முறையில் தயாரிக்கப்பட்டது சிங்கார். உங்கள் சருமத்தின் pH இயல்புக்கு சிங்கார் குங்குமப்பொட்டின் pH இயல்பு பொருந்துமாறு பார்த்துக்கொள்கிறோம். pH என்பது என்ன? அமில, காரத் தன்மைகளை வரையறுக்கும் அளவுகோல் அது; 0 முதல் 14 வரை வேறுபட்டிருக்கும். சருமத்திற்கு உள்ள pH ஏறத்தாழ 5.0. சிங்கார் கும்குமுக்கும் 5.0 இதன் அர்த்தம், உங்கள் முகத்துக்கு முழுப் பொருத்தம்—எனவே, எரிச்சலூட்டாது.

- அனுமதி பெற்ற வர்ணங்களின் வண்டலபடியாத் தைலக் குழம்பாகிய, சிங்கார் கும்கும், களையாப் பண்புடனே களை பொலிந்திடும்.
- உன்னதமான தரமுள்ள தயாரிப்பு—இதனைப் படைப்போர்: இந்தியாவிலேயே, பொதிவிட்ட குங்குமப் பொட்டுத் துறையில் முன்னோடிகள்.
- சிங்கார் டீலக்ஸ் கும்கும், வைபோகமான கும்குமம்—பளிச்சிடாப் பணிவுள்ள எழில்ரகமாக வருகுது. ஒளிமின்னும் சாதாரண கும்கும் ரகமும் கிடைக்கும்.




கருத்துடனே தெரிந்தெடுப்பீர்

## சிங்கார்

பாரத நாட்டின்
உச்ச விற்பனையுடைய
பரிபூரண நம்பிக்கைக்குரிய
கும்கும திலகம்

everest/282/SH/tm

எனக்கு மிகவும் பிடிக்கும். ரசிக்க ஆரம்பிக்கிறேன். என்னுடைய டென்ஷன் குறைந்து விட்டது போன்ற பிரமை.

காம்போஸ் மாத்திரையால் கிடைக்காத நிம்மதி இந்த இசைத்தட்டால் கிடைக்கிறது. சமயமறிந்து என் மனைவி ஒரு கப் காப்பியைக் கொண்டு வந்து நீட்டுகிருள்.

ஐந்தே கால் மணிக்குத் தயாரிப்பாளர்களில் ஒருவரான கோவிந்தராஜன் டெலிபோன் செய்கிருர். ''பாலு! இன்டர்வெல்லுக்குப் பிறகு படத்துக்கு அசாதாரண வரவேற்பு!'' என்கிருர்.

ஆறு மணிக்கு மீண்டும் கலாகேந்திரா அலுவலகத்துக்கு வருகிறேன். என் உதவியாளருடன் 'மூன்று முடிச்சுக்கள்' படப்பிடிப்பு விஷயமாகப் பெங்களூர் லொக்கேஷனைப் பற்றிப் பேசுகிறேன். 'மன்மத லீலை' பற்றிச் சில மணி நேரம் மறக்க முயற்சி செய்கிறேன்.

இங்கிருந்தாலும் டெலிபோன் சத்தம் கேட்டுக்கொண்டே இருக்கும் என்ற அச்சத்தில் என் உதவியாளர் அனந்துவுடன் பீச்சைப் பார்க்கக் கிளம்புகிறேன். ஒரு மணி நேரம், சில எதிர்காலத் திட்டங்களைப் பற்றி நிம்மதியாகப் பேசுகிறேன், எந்த வித இடையூறுகளும் இல்லை!

வீட்டுக்கு வரும்போது மணி எட்டரை. வழக்கம்போல் என் மகள் டெலிபோனில் அழைத்தவர்கள் பெயரை யெல்லாம் குறித்து வைத்து அவர்கள் சொன்னதையும் எழுதி வைத்திருக்கிருள். ஒரு நண்பர், ''பால சந்தருக்கு ஏன் இந்த மன்மத லீலை?'' என்று சொல்லியிருப்பதையும் எழுதி வைத்திருக்கிருள்.

சாப்பிட உட்காருகிறேன். பரிமாறிக் கொண்டே என் மனைவி கேட்கிருள்: ''ஊரார் அபிப்பிராயங்களுக்கு ஆலாய்ப் பறக்கிறீங்களே? என் அபிப்பிராயத்தைக் கேட்கவேண்டும் என்று தோன்றவில்லையா?'' என்கிருள். அவளும் முதல் நாள் படம் பார்த்திருக்கிருளே!

''சொல்லேன்!'' என்கிறேன் நான்.

''என்னைப் பொறுத்தவரை நீங்க இந்த மாதிரி சப்ஜெக்டை எடுத்துக் கொண்டிருக்க வேண்டாம் என்று நினைக்கிறேன்'' என்கிருள்.

''ஒரு சினிமா டைரக்டருக்கு எல்லா வித சப்ஜெக்ட்களையும் கையாளத் தெரிந்திருக்கணும்! அந்த விதத்தில் இது ஒரு முயற்சி'' என்று சொல்லி அவளைத் திருப்திப்படுத்த முயல்கிறேன்.

மீண்டும் மனம் அமைதியைத் தேடுகிறது. காலையில் மேலெழுந்தவாரியாகப் பார்த்த பத்திரிகையைக் கொஞ்சம் ஆழமாகப் படிக்கலாமே என்று உட்காருகிறேன்.

டெலிபோனில் ஓர் ஆப்த நண்பர் பேசக் காத்திருப்பதாக என் மகள் தெரிவிக்கிருள். போனை எடுக்கிறேன். அந்த நண்பர், என்னைத் தன்னுடன் அன்று இரவுக் காட்சியைச் சேர்ந்து பார்க்க வற்புறுத்துகிருர். மிகவும் களைப்பாக இருக்கிறது என்று அவர் அன்புப் பிடியிலிருந்து நழுவுகிறேன்.

நான் இப்போதெல்லாம் ஆரம்ப நாட்களில் படத்தைத் தியேட்டரில், பொதுமக்களுடன் உட்கார்ந்து பார்ப்பதைத் தவிர்க்க முயற்சி செய்கிறேன். நான் 'ஓஹோ' என்று நினைத்திருக்கும் கட்டத்தில் பொதுமக்கள் 'ரி-ஆக்ஷன்' இருக்காது. நான் சர்வ சாதாரண இடம் என்று நினைக்கும் கட்டத்தை ஆரவாரத்துடன் ரசிப்பார்கள். இந்த இடமாற்ற ரசிப்பு எனக்குப் பெரிய சோதனையாகிவிடுகிறது. இதைத் தாங்கிக்கொள்ளவும் முடிவதில்லை. ஆகவே, பத்து நாட்களுக்குப் பிறகு ஒரு வழியாக ஜனங்களின் உணர்ச்சிகள் நிர்ணயிக்கப்பட்ட பிறகு தியேட்டரில் போய்ப் படம் பார்க்கிறேன்.

இதே போலப் படத்தின் வெற்றி தோல்வியைக் கணிக்கவும் பத்து நாட்கள் அவகாசம் கொடுக்கிறேன். அவசரப்பட்டு எந்த முடிவுக்கும் வருவதில்லை.

தூக்கம் எட்டிப் பார்ப்பதுபோன்ற ஓர் உணர்ச்சி! அதற்காகவும் தவம் கிடக்க வேண்டியிருப்பதை நினைத்து நானே சிரித்துக் கொள்கிறேன்!

**கேட்டு எழுதியவர்: கோமதிசுவாமிநாதன்**






















# பொன்னியின் புதல்வர்

சுந்தா



## 25. கீர்த்தி விலாசம்

**வாசல் இது வாசல் இது — புகழ்**
**வாசம் கமழ் வாசல் இது**

"ஈழகேசரி" ஆசிரியர் இராஜ அரியரத்தினம் எழுதியுள்ள "கல்கி பிறந்தார்" என்ற நூலில், "கல்கியும் நானும்" என்ற அத்தியாயத்தின் தொடக்கம் —

நிறை மதி பால் நிலவைப் பொழிந்து கொண்டிருந்தது. அடையாறு காந்தி நகரிலுள்ள மாளிகை ஒன்றின் மேல் மாடியில் இருந்த எனக்கு அக்காட்சி குளிர்ச்சியையும், சாந்தியையும் ஊட்டிற்று. வெண்ணிலாவும், வெண்ணிற மாடி வீடுகளும் இரவையே பகலாக்கி விட்டன.... பால் நிலவு பொழிவதால் இவ்விடம் பாலாறுவிடப் போவதில்லை. அடையாறேதான் என்று என்னுள்ளே சொல்லிக்கொண்டிருக்கையில் வீட்டின் தலைவர், படிகள் மீதேறி மெதுவாக வந்துகொண்டிருந்தார்.

"வந்த காரியங்கள் எப்படி இருக்கின்றன? தமிழ் எழுத்தாளர் மகாநாட்டுக்குத் தாங்கள் வந்ததே மிக மகிழ்ச்சி" என்று சொல்லிக் கொண்டே நாற்காலியில் அமர்ந்தார்....

பூரணச் சந்திரன் அன்று கலையுடன் பொலிந்து விளங்கியது போலவே அவருடைய முகமும் களையுடன் பொலிவுற்றிருந்தது. தகப்பனார் அறைக்குள் வந்ததும் அவருடைய குமாரன் இராஜேந்திரன் கீழே இறங்கிச் சென்றுவிட்டார்.

"தாங்கள் நாளைக்கு யாழ்ப்பாணம் போவதைத் தள்ளி வைக்க வேண்டும். அன்பர்கள் பலருக்கு அழைப்பு அனுப்ப விருக்கின்றேன். எங்களுடன் இங்கே விருந்து சாப்பிட்டு விட்டு அடுத்த நாள் விமானத்திலேயே பறந்து சென்று விடலாம்" எனத் தமக்குரிய சிரிப்புடன் இனிமையாகச் சொன்னார், அன்புக்கும் மதிப்புக்கும் உரிய கல்கி ஆசிரியர்.

இவரைப் போலவே இன்னும் பலரும் அந்தக் காந்திநகர் வீட்டில் கல்கியைக் கண்டு அளவளாவியதைப் பற்றியும், விருந்துண்டதைப் பற்றியும் பெருமையுடன் எழுதியிருக்கிறார்கள்; சொல்லிக் கொண்டும் இருக்கிறார்கள்.

அந்த வீட்டில் இப்போது வசிக்கும் அதன் சொந்தக்காரர் வி. வி. எஸ். தேசிகன் (கல்கியின் நெருங்கிய நண்பர்களில் ஒருவரான வி. வி. கோபால ரத்தினத்தின் குமாரர்) மற்றவர்களைக் காட்டிலும் இயல்பாகவே அதிகப் பெருமையுடன் அதைப் பற்றியும், அதன் புகழ்மிக்க முதல் உடைமையாளரைப் பற்றியும் பேசுகிறார். அந்தப் பெரிய வீட்டின் வெவ்வேறு பகுதிகளையும் தேசிகனின் துணையுடன் சுற்றிப் பார்க்கையில் அதில் கல்கி வசித்தது நாலே நாலு ஆண்டுகள்தானே என்பதை நினைக்க





□ கௌரிக் கண்மணியுடன் தாத்தா கல்கி.

□ சிவகாமியின் சபதம் நாடகத்தை அரங்கேற்றிய இருபா அமெச்சூர்ஸ் நாடகக் குழுவினருக்குப் பாராட்டு. தேநீர் விருந்தினிடையில் திரும்பிப் பார்க்கிறார் கல்கி. அவருக்கு எதிரே நாகநந்தியாக நடித்த ராமமூர்த்தி.





- வீட்டின் மாடியில் அவரது தனி அறையில் பெரிய மேஜையை அடுத்து கல்கியின் சுழல் நாற்காலி. பக்கத்தில் உள்ள டிரங்குப் பெட்டியில் சரித்திர ஆதார நூல்கள்.
- கீர்த்தி விலாசம்.
- மகேந்திர பல்லவராகப் பகவதி. மாமல்ல நரசிம்மராக ஷண்முகம்.
- ஜெயப்பிரகாஷ் தம்பதிக்கு வரவேற்பு. இடது கோடியில் ஆனந்தி. கல்கிக்குப் பின்னால் நிற்பவர்கள் கோபாலன், ராஜேந்திரன்.

வருத்தம் உண்டாயிற்று. அதே சமயம் அந்தக் கடைசி நாலாண்டுகளிலும் அவருடைய வாழ்க்கை எவ்வளவு செறிந்ததாயும், பயனுள்ளதாயும், புகழ் மணம் கமழ்வதாயும் இருந்தது என்பதை எண்ணி வியக்கவும் தோன்றியது.

நாலாவது மெயின் சாலையில் இப்போது 62-ஏ இலக்கம் கொண்டுள்ள அந்த வீட்டைக் காந்தி நகர் உருவாகி விரிவடைந்து கொண்டிருந்த சமயத்தில், கூட்டுறவு வீடமைப்புச் சங்கத்தின்மூலம் கல்கி வாங்கினார். அதன் அப்போதைய விலை நாற்பதாயிரம் ரூபாய். முன் பணமாக ஐயாயிரம் ரூபாய் கொடுத்து, பாக்கித் தொகையை மாதத் தவணைகளாய் அடைத்துக் கொண்டிருந்தார்.

புது வீட்டில் 1951 தொடக்கத்தில் குடியமர்ந்த சிறிது காலத்துக்குப் பிறகு, அதன் இடப் புறத்தில் துணை வீடு ஒன்றைக் கல்கி கட்டினார். குற்றாலத்திலிருந்து டி. கே. சி. வரும்போதெல்லாம் அவரைத் தங்க வைத்து உபசரிப்பதற்கு வசதியாய் இருக்கும்பொருட்டே அதைக் கட்டினாராம். ஆனால் அப்போது எழுபது வயதைத் தாண்டியிருந்த அந்தப் பெரியவர் ஒரு தடவைகூட அதில் தங்கவில்லை. தள்ளாமை காரணமாய்க் குற்றாலத்தை விட்டு எங்கேயும் அவர் பயணம் செய்ய முடியவில்லை.

அந்தத் துணை வீட்டைத் தனது வசிப்பிடமாய் ராஜேந்திரன் வைத்துக் கொண்டான். அவனுடன் அவனுடைய அத்தான் — நாலு வயதுக்குப் பெரிய — கோபு என்ற வி. கோபாலன் தங்கியிருந்தார். அந்த இளைஞர் கல்கி மாமாவின் உதவியினால் பி. காம். வரை படித்துத் தேறி, ஒரு பெரிய பாங்கியில் உத்தியோகம் பார்த்துக் கொண்டிருந்தார். அதே பாங்கியில் இப்போது உயர் பதவி வகிக்கும் அவர், தமக்கு மட்டும் அல்லாமல், தமது சகோதர சகோதரிகளுக்கும் பெற்றோருக்கும் கல்கி செய்த உதவிகளை நன்றியுடன் சொல்லிக் கொண்டிருக்கிறார். கோபாலனின் மூத்த சகோதரர்தான் கல்கியின் செயலாளராய் இருந்த நாராயணசுவாமி.





சில மாலை வேளைகளில் அந்த இளைஞர் விடுதிக்குக் கல்கி வந்து, அங்கே தொங்கிய ஊஞ்சலில் ஆடிக்கொண்டே மகனுடனும், மருமானுடனும் பிரியமாய் உரையாடுவார். அவருடைய பிரியத்துக்காக அவர்கள் போட்டி இட வேண்டிய அவசியம் இருக்கவில்லை. அவருக்குப் பணிவிடை செய்வதற்குத்தான் போட்டி. தமது மாடி அறைக்குப் பக்கத்து வராந்தாவிலிருந்து, ''தம்பி'' ''கோபு'' என்று அவர் அடிக்கடி கூப்பிடுவார். புதுப் புதுப் புத்தகங்களோ, குறிப்பிட்ட ஹோட்டல்களிலிருந்து தமக்குப் பிடித்தமான பட்சணங்களோ அவரைப் படுத்திக் கொண்டே இருந்த நோய்களுக்கு வித விதமான மருந்துகளோ வாங்கி வரச் சொல்லுவார்.

அந்த வீட்டிலும், அதற்கும் துணை வீட்டுக்கும் இடையே அமைந்த அலங்காரத் தோட்டத்திலும் சிறிதும் பெரிதுமாய் அடிக்கடி விருந்துகள் நடந்தன. மட்டான பேர்களுக்கு விருந்து என்றால் தம் மனைவியின் பொறுப்பிலேயே அதைக் கல்கி நடத்தி விடுவார். பெருந் தொகையான பேர்களுக்கு என்றால், தக்க ஒப்பந்தக்காரர்களை அமர்த்திவிடுவார்.

புது வீட்டில் முதலாவது பெரிய விருந்து, ''சிவகாமியின் சபதம்'' கதையை நாடகமாகப் போடுவது பற்றி ஆலோசனை செய்வதற்காக நடந்தது. ராமகிருஷ்ணா மாணவர் இல்லத்தின் செயலாளரும், அதற்கு நிதி திரட்டுவதற்காக ராமகிருஷ்ணா கிருபா அமெச்சூர் நாடக சபையை நிறுவி நடத்தி வந்தவருமான சி. ராமானுஜாச்சாரியார் தமது குழுவினரில் தக்கவர்களைக் கொண்டு அதை நாடகமாய் வரையச் செய்திருந்தார். அந்த நாடக வாசகத்தை வாசித்து யோசனைகள் பரிமாறிக் கொள்வதற்காகச் சபையின் பொறுப்பாளர்கள், நடிகர்கள், நண்பர்கள் முதலானோர் சுமார் நூறு பேர்களைக் கல்கி அழைத்து விருந்தளித்தார். அப்போது பக்கத்தில் வசித்திருந்த சரித்திரப் பேராசிரியர் கே. வி. ரங்கசாமி ஐயங்கார், நாடகத்துக்கு உதவியாய் இருக்கக் கூடிய விதத்தில், பல்லவர் காலத்துச் சூழல், நடை உடை பாவனைகள் பற்றி முன்னுரை பேசினார். அதை அடுத்து, நாடக உரையாடல்களை, தமது பாராட்டுடனும், யோசனைகளுடனும் கல்கி வாசித்தார். எப்படி எப்படிக் காட்சிகளை அமைப்பது என்பதுடன், யார் யார் என்னென்ன பாகம் ஏற்பது என்பதும் அந்தக் கூட்டத்தில் நிச்சயம் செய்யப்பட்டது.

ஆண் ஒருவர் சிவகாமியாக நடிக்கப் போகிறார் என்பதை முதலில் கல்கியால் ஏற்க முடியவில்லை. ஆனால் பின்னர் அந்த இளைஞர் ஆடியும் அபிநயித்தும் நடித்ததைப் பார்த்த பின்னர், கல்கி வியந்து ''என்ஜினியர் ராமமூர்த்தி கதாநாயகியாக நடிப்பதற்கு வாய்த்தது ஒரு பெரிய அதிர்ஷ்டம்'' எனப் பாராட்டினார். கதாநாயகனை வரதராஜன் என்ற இளைஞர் நடித்தார். நாகநந்தியாகப் புகழ் மிக்க நடிகர் டாக்டர் வி. ராமமூர்த்தியும், பரஞ்சோதியாக முன் குறிப்பிட்ட தேசிகனும் நடித்தார்கள்.

மயிலாப்பூர் சுந்தரேசுவரர் ஹாலில் 14–4–51 தேதியன்று அந்த நாடக அரங்கேற்றத்தைப் பார்த்து விட்டுக் கல்கி பெரிதும் மகிழ்ந்தார்; அதைப் பற்றித் தாமே தமது பத்திரிகையில் தமது பெயரைப் போட்டுக் கொள்ளாமல் ஒரு பாராட்டு விமரிசனமும் எழுதினார். அந்த நாடகத்தில் சம்பந்தப் பட்டவர்களை யெல்லாம் தம் வீட்டுக்கு அழைத்து, மீண்டும் ஒரு விருந்து அளித்தார் — தமது மகிழ்ச்சியையும் புகழ்ச்சியையும் தெரிவிப்பதற்காக.

சுமார் நூறு தடவை ''சிவகாமியின் சபதம்'' நாடகத்தை வெவ்வேறு ஊர்களில் அந்தச் சபையார் நடத்தி, வசூல் பணத்தை ராமகிருஷ்ணா இல்லத்துக்கும் வேறு அற நிலையங்களுக்கும் அளித்தார்கள்.

(1962ல், அதே நாவலை, புத்தனேரி சுப்பிரமணியம் உரையாடலும் பாடல்களும் வரைந்து கொடுத்த வடிவில், டி. கே. எஸ். சகோதரர்கள் நாடகமாய் அரங்கேற்றினார்கள். அதில், மூத்த சகோதரர் டி. கே. ஷண்முகம் மாமல்லராயும், இளைய சகோதரர் டி. கே. பகவதி மகேந்திர பல்லவனாயும் நடித்தார்கள். எம். ஹேமலதா சிவகாமியின் பாகத்தை ஏற்றார். அவருடைய நடனத்தை வழுவூர் ராமையா பிள்ளை இயக்குவித்தார். மொத்தம் இருநூறு தடவை நடந்த அந்த நாடகம் கல்கியின் நினைவைச் சிறப்பான முறையில் போற்றுவதாய் அமைந்தது.

அதைப் பற்றிய விமரிசனம் ஒன்றில், ''சந்தன மரத்தில் தாமரைத் தேன்'' என, நற்றிணைப் பாடல் ஒன்றை நினைவூட்டி, டாக்டர் மு. வரதராசன் வர்ணித்தார்: ''கற்பனை வளம் நிறைந்த எழுத்

---



போஸ்ட் ஆபீஸில், குற்றவாளிகளின் படங்களை மாட்டியிருந்தார்கள். அதைப் பார்த்துக்கொண்டிருந்த ஒருவர் சொன்னார்: ''ஹும்; என்ன போலீஸ் நிர்வாகமோ! போட்டோ பிடிக்கும்போதே வளைத்துப் போடக் கூடாதா? அப்போ கோட்டை விட்டுவிட்டு இப்போது 'அவர்களைக் கண்டு பிடித்துக் கொடுப்பவர்களுக்குப் பரிசு' என்று போடுகிறார்களே, சே!'' — சாமி

வயது எவ்வளவானாலும்
உங்களுக்கு நரை
இருக்க வேண்டிய
அவசியமில்லை!

என்னைப் பாருங்களேன்.
எனக்கு என்ன
வயதிருக்கும்?

பெண்ணுக்குக் கல்யாணமாகி
விட்டது. பிள்ளையும் நல்ல
வேலையிலிருக்கிறான்.
அப்படியானால் மிகவும்
வயதானவளைப் போலக்
காட்சியளிக்குமளவுக்கு எனக்கு
வயதாகிவிட்டது என்று
அர்த்தமா என்ன!
ஒரு நாளும் இல்லை!

அதனால்தான் கூந்தலுக்குச்
சாயம் பூசுவதற்குத் தயங்கவே
இல்லை நான். அதற்காக,
பூசுவதற்குக் கடினமான
தொல்லை தரும் சாயங்களையோ
அல்லது இழை இழையாகப்
பிரித்துச் சாயமேற்றும்
சிரமத்தையோ நான்
விரும்பினேன் என்று
அர்த்தமில்லை.
ஆனால் அந்தத் தொல்லைகளை
யெல்லாம் நானும்
அனுபவித்திருக்கிறேன் —
முதன் முதல்
கோத்ரேஜ் ஹேர் டையை
உபயோகித்துப் பார்க்கும் வரை.

பாரதத்திலேயே
முதன்முதல்
தயாராகும்
தானே-பரவும்
ஹேர் டை.




அது முதல் கூந்தலுக்குச்
சாயமேற்றுவது என்றால்
எத்தனை எளிது தெரியுமா!

கோத்ரேஜ் ஹேர் டை —
இதனை ஈர ஸ்பஞ்சு
மூலம் கூந்தலில்
மென்மையாகத் தடவினால்
போதும். அது மட்டுமா!
இனிய நறுமணம்,
எதிலும் மென்மை!

இப்போது நான், மாதக்
கணக்கில் கோத்ரேஜ்
ஹேர் டை உபயோகித்து
வருகிறேன். அது

கூந்தலை இளமையாகவும்
பளபளப்பாகவும்
இயற்கையாகவே கருமை
யாகவும் வைத்திருக்கிறது.

அதிருக்கட்டும், எனக்கு
என்ன வயதிருக்கும் என
நினைக்கிறீர்கள்!

**கோத்ரேஜ்**
**பர்மனென்ட் ஹேர் டை**
இதர ஹேர் டைகளை பிந்தியவைகளாக்கி விட்டது.

ஆண்களுக்கும் பெண்களுக்கும் டை!
2 வண்ணங்கள்: இயற்கையான கருமை, கரும் பழுப்பு.

CMGS-80-203 TM

பிகாஸோவுக்குத் தமது பதினோராவது வயது வரை ஒன்று இரண்டு, மூன்று என்று எண்ணத் தெரியாது. அப்போது அவருக்கு 7 (ஏழு) என்ற எண், தலைகீழாக உள்ள மனித மூக்கு போலத் தெரிந்ததாம்!

— நியூயார்க் டைம்ஸ் மாகஸின். - ராமு



தாளர் ஒருவரின் உள்ளத்திலிருந்து எழுந்த கதை; திறன் வாய்ந்த ஒருவர் போற்றி அமைத்துத் தந்த நாடக வடிவம்; பண்பாடு மிகுந்த கலைஞர் விழைந்து நடித்து அரங்கேறச் செய்த அருமைக் கலைச் செல்வம்.''

சிறிது காலத்துக்குப் பிறகு, கல்கியின் இதே கற்பனைப் படைப்பை, ஒரு நாட்டிய நாடகமாகத் தமது நடனக் குழுவினருடன் நடிகை சந்திரகாந்தா அரங்கேற்றிச் சுமார் நூறு தடவை நடத்தினார். அதற்கேற்ற வடிவில் புத்தனேரி சுப்பிரமணியமே பொருத்தமான பாடல்கள் புனைந்து கதையை அமைத்துக்கொடுத்தார்.)

மற்றும் அந்த இல்லத்தில் நடந்த பெரிய விருந்துகளில், பிரஜா சோஷலிஸ்ட் தலைவர்கள் ஜெயப்பிரகாஷ் நாராயணருக்கும் அசோக மேத்தாவுக்கும் இரு வேறு சமயங்களில் தனித் தனியே கல்கி அளித்தவைகளைக் குறிப்பிடலாம். ஒவ்வொன்றிலும், தென்னக சோஷலிஸ்ட் தலைவர்கள், தொண்டர்கள், பத்திரிகைக்காரர்கள் முதலானோர் இருநூறு பேர்களுக்கு மேல் கலந்துகொண்டார்கள்.

காங்கிரஸ் கட்சி மீது கல்கி நம்பிக்கை கொண்டு அதன் ஆட்சியைப் பெரும்பாலும் ஆதரித்து வந்தபோதிலும், ஜனநாயக அரசியலில் நல்ல எதிர்க் கட்சி ஒன்று அவசியமானது என்பதை உணர்ந்து, அது பற்றி அடிக்கடி எழுதினார். உதாரணமாய்—

எவ்வளவுதான் தேசபக்தர்களைக்கொண்ட நல்ல சர்க்காராய் இருந்தாலும், தாங்கள் செய்வதே சரி என்ற எண்ணம் பெரும்பாலும் சர்க்காரை நடத்துவோருக்கு உண்டாகிவிடுகிறது. தங்கள் திட்டங்களிலும் முறைகளிலும் குறைபாடுகள் இருக்கக்கூடும் என்ற எண்ணமே அவர்களுக்குத் தோன்றுவதில்லை. ஒரே கட்சியைச் சேர்ந்தவர்கள், கட்சிக் கட்டுப்பாட்டின் காரணமாக, சர்க்கார் செய்யும் காரியங்களில் குறைகள் இருந்தால் எடுத்துக் காட்ட முடிவதில்லை. ''நம்முடைய காரியங்களைக் கண்ணும் கருத்துமாகப் பிறர் கவனிக்கிறார்கள்; குற்றங் கண்டு பிடிக்கத் தயாராய் இருக்கிறார்கள்'' என்ற உணர்ச்சி இருந்தாலன்றி, எப்பேர்ப்பட்ட தேச பக்தி வாய்ந்த திறமையுள்ள மந்திரிகளும் ஆத்ம திருப்தி அடைந்து சோம்பி இருந்துவிடும் அபாயம் ஜனநாயகத்தில் உண்டு. மந்திரிகளாக வருவோர் திறமையற்றவர்களாகவும், சுயநலக்காரர்களாகவும் இருந்துவிட்டால் சொல்ல வேண்டியதில்லை. அந்த நிலைமையில் நல்லதோர் எதிர்க் கட்சி இல்லை என்றால், தேச நலம் அரோஹரா ஆகிப் போய்விடும். ஆகவே, ஜனநாயகத்தில் ஆளும் கட்சிக்கு எதிர்ப்புக் கட்சி ஏற்படுவது இன்றியமையாதது. சந்தர்ப்பம் நேர்ந்தால், அரசாங்கத்தை ஏற்று நடத்தும் யோக்கியதை வாய்ந்ததாக அந்த எதிர்ப்புக் கட்சி இருக்க வேண்டும்.

(கல்கி இதழ் 10-1-54)

அத்தகைய எதிர்க் கட்சியாய், அப்போது பலம் பெற்றுக் கொண்டிருந்த பிரஜா சோஷலிஸ்ட் கட்சியே இருக்கவல்லது என்று கல்கி கருதினார். முன்பிருந்தே சோஷலிஸக் கருத்துக்களைக் கொண்டும் பரப்பியும் வந்தவர் அவர். இந்தியாவுக்கு சோஷலிஸம் பொருந்தாது என்பதாக, ஒரு சமயம் மத்திய நிதி மந்திரி தேஷ்முக் கூறியதைக் கல்கி மறுதலித்து, அந்தக் கூற்றுக்குப் பதிலடியாக, ''சோஷலிஸம் வரவேண்டும்; இன்றேல் கம்யூனிஸம் வந்தே தீரும்'' என்று அதிரடி கொடுத்தார்.

சமதர்ம சமுதாய நிலையை நோக்கி உலகமே போய்க் கொண்டிருக்கிறது. அதைத் தடுத்து நிறுத்தப் பார்ப்பது சூறைக் காற்றைத் தடுக்க முயல்வது போன்ற மடமையாகும்.

பாரத நாட்டில் சோஷலிஸம் கூடிய விரையில் அமைதியான, சட்ட ரீதியான முறைகளில் அமலுக்கு வரவேண்டும். அதற்காக, இந்த நாட்டின் நலத்தில் பற்றுக் கொண்டவர்கள் அனைவரும் பிரார்த்தனை செய்ய வேண்டும், பிரயத்தனமும் செய்ய வேண்டும்.

சோஷலிஸம் அமுலுக்கு வராவிடில், யார் தடுத்தும் கேளாமல் ஒரு நாள் கம்யூனிஸம் வந்தே தீரும்! தேஷ்முக் போன்றவர்களின் ''பொருத்தமில்லை''ப் பல்லவியை அது சிறிதும் பொருட்படுத்தாது. ஆயிரம், பதினாயிரம் தேஷ்முக்குகளை அதல பாதாளத்தில் அமுக்கி, இருந்த இடம் தெரியாமல் செய்து கம்யூனிஸம் வந்து சேரும்! அப்படி அது வரும்போது செய்யும் குழப்பத் தொண்டுகளின் பலன்களையும் இந்நாட்டின் மக்கள் அனுபவித்தே தீரும்படி இருக்கும்.

(கல்கி இதழ் 10-5-53)

இதே வித சோஷலிஸ எண்ண அலைகளை, ''அலை ஓசை'' நாவலின் வெவ்வேறு கட்டங்களில் சூரியாவின்

பேச்சின் மூலம் கல்கி விசச் செய்திருக்கிருர் என்பது கவனிக்கத் தக்கது.

''அலைஓசை'' நாவலை அடுத்துக் கல்கி எழுதிய ''பொன்னியின் செல்வன்'', அந்தக் காந்தி நகர் வீட்டில் நிகழ்ந்த, மிகப் பெரிய, மிகச் சிறந்த சாதனை. அந்த வீட்டின் மாடியில் அவருடைய தனி அறையைப் பார்த்ததும், அங்கே அப்போதிருந்த அவருடைய பெரிய மேசையை அடுத்து அவர் சுழல் நாற்காலியில் உற்கார்ந்து எழுதிய காட்சி, கற்பனையில் தோன்றியது. அத்துடன் அந்த அறையிலிருந்து அந்த மாபெரும் சாதனையைப் புரிந்த அவருடைய ஆற்றலை எண்ணிப் பிரமிக்கவும் தோன்றியது.

அந்த நெடுங்கதை, வரி வரியாய்ப் பக்கம் பக்கமாய், அத்தியாயம் அத்தியாயமாய், அந்த அறையில் அந்த மேஜை மீது உருப்பெற்று, கல்கி இதழ்களில் மூன்றரை வருடம் ஓடிற்று. (பின்னர் அது மங்கள நூலக வெளியீடாய்ப் புத்தக வடிவில் வந்தபோது, அதன் நீளம் ஐந்து பாகங்களில் முழுத் தொகையாய் 2300 பக்கங்கள்.) பிரமிக்க வைப்பது அதன் நீளம் மட்டும் அல்ல; அதன் ஆழமும், அகலமும்தான். பொன்னியின் ஆடிப் பெருக்கைப்போல் கற்பனைப் புனலாக, வண்ணத் தமிழ் வெள்ளமாகக் கரை புரண்டு ஓடுகிறது கதை. நிஜப் பொன்னியைப் போலவே கதைப் பொன்னியிலும், அங்கங்கே சுழிகளும், தேக்கங்களும், கசங்களும் உண்டு. அதனுல் என்ன என்று, பொன்னி ஆற்றைக் கொண்டாடுவது போலப் பொன்னியின் செல்வனையும் கொண்டாடுகிறோம்.

''பொன்னியின் செல்வனும்
பூங்குழலி அம்மையும்
வந்தியத் தேவனும்
வானதியும் குந்தவையும்
பழுவூர் நந்தினியும்
பழுவேட் டரையர்களும்
பாடாய்ப் படுத்துகின்ருர்
(படிக்கும் போதெல்லாம்)''

''பொன்னியின் செல்வன்'' தொடராய் வந்து கொண்டிருக்கையில், விழுப்புரத்தில் உள்ள மகாத்மா காந்தி பாடசாலையில் கல்கிக்கு அளித்த வரவேற்பு மடலில் உள்ளது இந்தப் பாடல். இதைப் போலவே அந்தப் பெருங் கதையில் உலவும் மாந்தருடன் மனம் ஒன்றிய விதத்தில் எத்தனையோ பாராட்டுக்கள். அவற்றைக் கடிதங்கள் மூலம் தெரிவித்தவர்கள் எத்தனையோ பேர்; நேரிலே தெரிவிக்க வீடு தேடி வந்தவர்களும் எத்தனையோ பேர். முன் எப்போதையும் விட அதிகமாய்ப் பெருகிய அவருடைய வாசகர்கள், பேராவலுடன் அந்தக் கதையைத் தொடர்ந்து படித்தார்கள். வாரா வாரம் மூன்றரை வருடம் படித்தும் தெவிட்டாமல், மேலும் மேலும் படித்துக் கொண்டே இருக்க விரும்பினுர்கள். திட்டமிட்டபடியே பொன்னியின் செல்வனின் தியாகச் செயலுடன் அந்தக் கதையைக் கல்கி முடித்து முற்றுப்புள்ளி வைத்தபோது, அரைகுறையாய் அதை நிறுத்திவிட்டதாகப் பல வாசகர்கள் குறை கூறினுர்கள். அவர்களுக்கு அவர் சமாதானம் சொல்ல வேண்டியதாயிற்று. (நாவலின் முடிவுரையில் அதைக் காணலாம்.)

கல்கியின் கற்பனைச் செல்வத்தைச் சூறையாடி ''பொன்னியின் செல்வன்'' வளர்ந்த அதே வீட்டில் அதே சமயத்தில் ஒரு சின்னஞ் சிறு செல்வி அவருடைய இதயச் செல்வத்தைக் கொள்ளை கொண்டு வளர்ந்தாள். ஆனந்தியின் ஒரு மாதக் கைக் குழந்தையாய்ப் புது வீட்டுக்கு வந்த அந்தச் செல்வி நீந்தித் தவழ்ந்து நடக்கப் பழகி ஓடியாடி விளையாடியதை, கட்டம் கட்டமாய்க் கல்கித் தாத்தா கண்டு மகிழ்ந்தார். அவளுடைய மழலையையும் மழலை மாறிய வெடுக்கும் துடுக்குமான பேச்சையும் கேட்டு வியந்தார்; அவளுடைய விளையாட்டுக்களைப் பார்த்தும், அவளுடன் சேர்ந்து விளையாடியும் களிப்புற்ருர். தம்முடைய தனித் திறமையான கதை சொல்லும் திறமையை அவளிடம் காட்டி ஆனந்தம் அடைந்தார். வியப்புடனும் களிப்புடனும் தம்முடைய கதைகளை அவள் கேட்பதைக் கண்டு, அந்தச் சின்னஞ் சிறு ரசிகையின் முன், தம்முடைய பெரிய பெரிய ரசிகர்கள் எல்லாம் எம்மாத்திரம் என்று எண்ணியிருப்பார்.

பேத்தி எவ்வளவு படுத்திலுைம் சரி, என்ன விஷமம் செய்தாலும் சரி, தாத்தா பொறுத்துக் கொள்வார். ஒரு தரம் அச்சுக்கு அனுப்பத் தயாராய் அவர் வைத்திருந்த தாள்களைச் சுக்கு நூருய்க் கிழித்துப் போட்டு விட்டாள். அதற்காக அவளை அவர் கொஞ்சமும் கடிந்து கொள்ளாமல், அவள் கிழித்து அழித்ததை மீண்டும் எழுதிப் படைத்து விட்டார்.

அவள் கீழே விழுந்தோ, எதிலேனும் முட்டிக்கொண்டோ அழுதால், வீட்



நூல் நிலையத்தில் ஒரு வாசகர் கேட்டார்: '' 'ஆண் பெண்ணைவிடத் திறமைசாலி' என்ற நூல் எங்கே இருக்கிறது?''
நூலகத்தில் பணி புரிந்த பெண் சொன்னுள்: ''கற்பனை நாவல்கள், நாலாவது அலமாரியில் இருக்கின்றன.''
— முத்து

# இணையற்ற எழில்மேனி.
# மென்மை. வழவழப்பு. இயற்கையான வனப்பு.

ஆம்! லக்ஸ் ஸுப்ரீம் உங்கள் மேனி எழிலுக்கு
மெருகூட்டுகிறது. நீங்களே அதை உணர்ந்து
மகிழ்வீர்கள். லக்ஸ் ஸுப்ரீம்
மட்டுமே ப்யூடி க்ரீம் உட்கொண்டதாகும்.
பெருகும் அதன் செழுமையான நுரையில்
உள்ள ப்யூடி க்ரீமின் ஸ்பரிசத்தையும்
அதனின்று கமழும் இணையற்ற மெய்
மறக்கச் செய்யும் நறுமணத்தையும்
நீங்கள் உண்மையாகவே அனுப-
விக்க முடியும். அதன் செழுமையான
நுரை உங்களது சருமத்தைத் தழுவிச்சென்று,
மேனியைப் பட்டுப்போன்று மிருதுவாக இயற்கை
வனப்புடன் வைக்கிறது.





**லக்ஸ் ஸுப்ரீம்**

இந்துஸ்தான் லீவர் லிமிடெடின்
தரமான தயாரிப்பு.

HLLS-9265 (A)

மகாராஷ்டிர அரசு, பேய் ஓட்டுவதற்காக வருடத்துக்கு இரண்டரை ரூபாய் செலவு செய்கிறது. புனே மாகாணத்திலுள்ள ஒரு தாசில்தார் அலுவலகத்தில் பேய் நடமாடுவதாக நம்பி அதை ஓட்டும் சடங்குக்காகத் தான் இந்தச் செலவு — இது பிரிட்டிஷ் காலத்திலிருந்தே வழங்கப்பட்டு வருகிறது. வெறும் இரண்டரை ரூபாயாக இருப்பதால் இது ஒன்றும் பெரிய செலவாகத் தெரியவில்லையாம்.

— பயோனிர் - சாமி



டில் உள்ளவர்களை யெல்லாம் கோபித்துக் கொள்வார். ''இத்தனை பேர் இருந்து என்ன பிரயோஜனம்? குழந்தையை ஜாக்கிரதையாய்ப் பார்த்துக் கொள்ளத் தெரியவில்லையே!'' என்று சத்தம் போடுவார்.

ஒரு சமயம் அவர் குழந்தையைத் தூக்கிக் கொண்டு வீட்டுத் தோட்டத்தில் உலாவுகையில், அவளுடைய நெற்றி சுவரில் மோதிவிட்டது. அவளுடைய அழுகையைக் கேட்டு விரைந்து வந்த ருக்மிணி அம்மாள், ''இப்படியா அஜாக்கிரதையாய் இருப்பேன்!'' என்று கணவருக்குச் சூடு கொடுத்து விட்டு, தம் அணைப்பில் குழந்தையை எடுத்துக் கொண்டு சமாதானப்படுத்தினார். தாம் பெரிய குற்றம் செய்து விட்டதாக நாலைந்து நாட்கள் கல்கி புலம்பிக் கொண்டே இருந்தார்.

அந்தக் குழந்தை பிறந்த தகவல் அறிந்ததுமே, அப்போது டெல்லியிலிருந்த ராஜாஜி, ''ஆனந்திக்கும் கௌரிக்கும் ஆசிர்வாதம்'' என்று பெயர் வைத்து வாழ்த்துச் செய்தி அனுப்பினார். மகளுக்கு இட்டது போலவே பேத்திக்கும் அப் பெரியவர் பெயர் இட்டதைக் கல்கி பெருமையுடன் ஏற்றுக் கொண்டார். ஆனால் அந்தப் பெயருடன், தமது பாசத்தைக் குறிக்கும் அடைமொழி ஒன்றைச் சேர்த்துக் கொண்டு, ''கௌரிக் கண்மணி'' என்று வாய் நிறையக் குழந்தையைக் கூப்பிட்டார்.

ஓய்வு பெற்ற தாத்தாக்கள் பேரக் குழந்தைகளுடன் கொஞ்சி விளையாடுவதில் ஆச்சரியம் இல்லை. ஆனால் கல்கியோ, அப்போது ஐம்பதே வயதைக் கடந்த உழைக்கும் தாத்தாவாய் இருந்தார். எத்தனையோ அலைச்சல்களுக்கும் நெறி பறியான வேலைகளுக்கு மிடையே கௌரிக் கண்மணியுடன் கொஞ்சி விளையாட அவர் நேரம் தேடிக் கொண்டது ஆச்சரியமே.

ஒரு நாள் மாலை, காரிலிருந்து இறங்கியதும், ஏதோ அவசரமாய் எழுதுவதற்காக, கூடத்திலிருந்த பேத்தியைக் கவனியாமல், அவர் மாடிப் படிகளில் ஏறினார். தன்னை அவர் அலட்சியம் செய்ததைக் கண்ட கௌரி, ''ஏ தாத்தா வா இங்கே!'' என்று கட்டளை இடும் தோரணையில் கூப்பிட்டாள். எல்லாரும் திகைத்து நிற்கையில், அவளுடைய கட்டளைக்குத் தாத்தா பணிந்து கீழே இறங்கி வந்து, அவளை அணைத்துக் கொண்டு கொஞ்சினார்.

''குழந்தைதான் எத்தனை அழகு!'' என்று சொல்லிச் சொல்லிக் கல்கி வியந்து கொண்டிருந்தார். அவருடைய கண்ணுக்கு மட்டும் அல்லாமல், உண்மையிலேயே அவள் அழகாகத்தான் இருந்தாள். எவ்வளவு அழகாய் என்பதைக் கல்கி பத்திரிகையின் வாசகர்கள் 1955 டிசம்பர் நாலாம் தேதிய கல்கி நினைவு மலரில் வெளியான, அவளுடைய வெவ்வேறு தோற்றப் படங்களிலிருந்து காண முடிந்தது. அந்த முதல் ஆண்டு நினைவு மலருக்கு முன்பே, முந்திய ஆண்டு டிசம்பர் 19ந் தேதிய கல்கி அஞ்சலி மலரில், ''தாத்தாவும் பேத்தியும்'' படம் ஒன்று ஒரு முழுப் பக்கத்தில் வெளியாயிற்று. அதில் கல்கி மூன்று மாதக் கௌரிக் கண்மணியை மடியில் வைத்து அணைத்துக் கொண்டு பெருமையுடன் பார்க்கிறார்.

அழகுடன் அறிவும் பொருந்திய குழந்தையாய் இருந்தாள் கௌரி. அதற்கு ஓர் எடுத்துக்காட்டாகக் கர்நாடக ராகங்கள் பலவற்றைக் கேட்ட மாத்திரத்தில் அவள் இனம் கண்டு, அவற்றின் பெயர்களைச் சொல்வதைக் குறிப்பிடலாம். ஆனந்தியின் புக்ககத்தில் எம். எஸ். பாடிப் பாடிச் சொல்லிக் கொடுத்ததால் அடைந்த தேர்ச்சி அது. அவளுடைய அந்த ஆற்றலைக் கண்டு வியந்தவர்களில் ராஜாஜியும் ஒருவர். அதைப் பற்றி அவர் ஒரு கட்டுரை எழுதிக் கல்கியிடம் கொடுத்து அவருடைய பத்திரிகையில் வெளியிடச் சொன்னார். ஆனால் அதற்குக் கல்கி இணங்கவில்லை. ராஜாஜியே எழுதியதாய் இருந்தாலும், தம் பேத்தியின் பெருமையைத் தம் பத்திரிகையில் வெளியிடலாகாது என்று அவர் கருதினார் போலும். வெளியிடாத அந்தக் கட்டுரையை மனைவிக்கும் ஆனந்திக்கும் - மற்றவர்களுக்கும் படிக்கக் கொடுத்து, மகிழ்ச்சியும், பெருமையும் அடையச் செய்தார்.

மொத்தத்தில் அந்த வீடு, பொன்னியின் புதல்வரின் இதய அன்பு பெருகவும் இலக்கியப் புகழ் ஓங்கவும் கண்ட சிறப்புக்கு உரியது. (தொடரும்)

(சென்ற இதழ் தொடர்ச்சி)

ஐஸன்ஹோவர் வெற்றி பெற்று, ஹாரி ட்ருமன் பதவியை அவரிடம் ஒப்படைக்கும்போதும் அவர்களுக்குள் கோப தாபங்கள் இருந்தன.

ஜனவரி 18ந் தேதியே ஐஸன் ஹோவர் வாஷிங்டனுக்கு வந்து விட்டாலும் அவருக்கு நூறு வருஷ கால மாக அமலில் இருந்த வழக்கப்படி வெள்ளை மாளிகைக்கு விஜயம் செய் யும்படி அழைப்பு வரவேயில்லை.

ஜபர்ஸன் காலத்திலிருந்து இன்னொரு வழக்கமும் இருந்தது. புதிய ஜனாதிபதி பதவி ஏற்கப் போகும் போது, வழியில் ஜனாதிபதி மாளிகைக் குள் நுழைந்து பழைய ஜனாதிபதியை யும் அழைத்துக் கொண்டு போவது தான் அந்த வழக்கம்.

ட்ருமனுக்கு இதுவும் பிடிக்கவில்லை. பதவியை விட்டுப் போவது அவர் மனத்தை மிகவும் சங்கடப்படுத்தி யிருக்கக் கூடும். ஐக்குடன் அவர் போகவில்லை. ஐக்கும் சம்பிரதாயப் படி வெள்ளை மாளிகைக்குள் நுழைய வில்லை.

இந்த ட்ருமனுடைய மனைவிதான் 'அப்படி என்னம்மா ஒசத்தி இந்த வெள்ளைமாளிகை?' என்று கேட்டவள்.

அதுமட்டுமல்ல, ஹாரி ட்ருமன், ஐஸன்ஹோவரிடம் வெள்ளை மாளி கையை ஒப்படைத்து விட்டுப் போக மூக்கால் அழுது கொண்டிருக்கிற போது, அப்படிப் போவதைப் பற்றி அளவிலாச் சந்தோஷம் கொண்டவ ளும் அவளேதான்.

### லெமனேட் லூஸி

ருதர்போர்ட் ஹெய்ஸின் மனை விக்கு ஜனாதிபதி மாளிகையில் பிடிக் காத அம்சம் ஒன்று இருந்தது. அது அங்கே வழங்கப்பட்ட மது.

'''நான் மட்டும் 'பர்ஸ்ட் லேடி' யாக ஆனால் அப்புறம் பாரேன்!'' என்று கறுவிக் கொண்டிருந்த மாதிரி, பதவி ஏற்பு விழா அன்றே அவள் ஆட்சி செலுத்த ஆரம்பித்து விட் டாள். பதவி ஏற்பு விருந்தின்போது உயர்ந்த மது வகைகளை அருந்தலாம் என்று ஆசையுடன் வந்தவர்களுக் கெல்லாம் ஒரே ஏமாற்றம். தீங்கற்ற சாதாரண பான வகைகளே காணப் பட்டன.

'லெமனேட் லூஸி' என்று பிற் காலத்தில் பெயர் பெற்றுள் ஹெய் ஸின் மனைவி.

மாடிஸனுடைய மனைவி டோலி மாடிஸன் வெள்ளை மாளிகையில் வசிப்பதை மிகப் பெருமையாகக் கரு தினாள்.

அவள் ஏராளமான விருந்துகள் கொடுத்தாள். வெள்ளை மாளிகை யின் தேவதையாக அவள் இகழ்ந்

# வெள்ளை மாளிகை







- ஜேம்ஸ் புக்கனன்.
- ஜனாதிபதி பதவிக்கு முதல் தடவையாகப் போட்டி யிட்ட நீக்ரோ பிரஜை பால்ஜுபர்.
- எலினர் ரூஸ்வெல்ட்.
- கால்வின் காலிட்ஜ் பிரமாணம் எடுத்துக் கொள் கிறார்.
- ஐஸன்ஹோவர்.

# விநோதங்கள்!

"ரகு"

தான். அவள் காலத்தில் அவள் பெற்ற முக்கியத்துவம்தான், 1911ம் வருஷம் அவள் வாழ்க்கையையே ஓர் அழகான நாடகமாக்கும்படி ஒரு நாடக ஆசிரியரைத் தூண்டியது. அந்த நாடகத்துக்கு அவர் 'பர்ஸ்ட் லேடி' என்று பெயர் கொடுத்தார். அதன் பின்னர் தான் ஜனாதிபதியின் மனைவியைப் பர்ஸ்ட் லேடி என்று அழைக்கும் சம்பிரதாயம் தோன்றியது.

## கறுப்பு உடையில்...

பிராங்ளின் பியர்ஸின் மனைவி ஜேன் அவள் கணவர் ஜனாதிபதிக்கு அபேட்சகராக நின்ற வருஷத்தில் ஏகப்பட்ட துயரங்களுக்கு ஆளானாள்.

அவள் கணவர் மிதமிஞ்சிக் குடிப்பவராக இருந்தார். அதன் காரணமாகவே அவரை விட்டு அவள் சில காலம் பிரிந்தும் இருந்தாள். அவளுடைய இரு குழந்தைகளும் அகால மரணமடைந்தன.

தம் கணவரின் நெறிகெட்ட வாழ்க்கைக்குக் கடவுள் அளித்த தண்டனைதான் அந்த இழப்புக்கள் என்று பியர்ஸின் மனைவி எண்ணினாள்—ஏன், மனப்பூர்வமாக நம்பவும் செய்தாள்.

குழந்தைகளைப் பறித்துத் தன் கணவனைத் தண்டித்ததாக அவள் நினைத்துக் கொண்டிருக்கும்போது, அதே கடவுள், அதே கணவனுக்கு மகத்தான பதவியையும் அளித்துவிட்டார்.

பிராங்ளின் பியர்ஸ் அமெரிக்க ஜனாதிபதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டு விட்டார். அவருக்கு மகிழ்ச்சி சொல்ல முடியாது.

ஆனால், அதே சமயம், ஜேனுக்குக் கடவுள் இன்னொரு பெரிய நஷ்டத்தையும் கொடுத்து விட்டார். ஜனாதிபதியாகப் பதவி ஏற்பதற்கு அவள் கணவன் ஏற்பாடு செய்துகொண்டிருக்கும்போது அவர்களுடைய கடைசிப் பையன் ஒரு ரயில் விபத்தில் மரணமடைந்து விட்டான்.

பியர்ஸ் பதவி ஏற்றபோது ஜேன் வரவே இல்லை. அவள் துயரக் கடலில் மூழ்கியிருந்தாள்.

வெள்ளை மாளிகையில் அவள் வசித்த காலம் முழுவதும் கறுப்பு உடையே தரித்திருந்தாள். எந்தவிதமான கேளிக்கைகளிலும் கலந்துகொள்ளவும் இல்லை.

## துர்ப்பாக்கியவதி

வில்லியம் ஹென்றி ஹாரிஸனின் மனைவி, ஹாரிஸன் தேர்ந்தெடுக்கப்பட்டபோது அவளுடைய சொந்த ஊரான ஓஹையோவில் நோய்வாய்ப்பட்டுக் கிடந்தாள்.

பதவி ஏற்பு விழாவன்றுகூட அவள் உடல் நலமடையவில்லை. அவள் இல்லாமல்தான் ஹாரிஸன் வாஷிங்டனுக்குப் பதவி ஏற்க வந்தார். 8445 வார்த்தைகளைக் கொண்ட ஒரு பெரிய பிரசங்கத்தை அவர் தயாரித்துக் கொண்டு வந்திருந்தார்.

கோலாகல குதூகலத்துடன் விழா ஆரம்பமாயிற்று. ஜனாதிபதி தம் பிரசங்கத்தைப் படிக்க ஆரம்பித்தபோது திடீரென்று பலவீனமுற்றுக் கீழே சாய்ந்து விட்டார். குளிர் ஜுரம் வந்துவிட்டது அவருக்கு.

இங்கே வெள்ளை மாளிகையில் இவரும் அங்கே ஓஹையோவில் அவளும் எழுந்திருக்கவே இயலாதவர்களாகக் கீழே கிடந்தார்கள்.

விழுந்த ஜனாதிபதி அப்புறம் எழுந்திருக்கவே யில்லை. ஒரே மாதத்தில் அவர் வாழ்வு முடிந்து விட்டது. அவர்தான் பதவியில் இருந்தபோது காலமான முதல் அமெரிக்க ஜனாதிபதி.

அவர் மனைவி கடைசி வரையில் வெள்ளை மாளிகையில் காலடி எடுத்து வைக்கவேயில்லை. அவள்தான் வெள்ளை மாளிகையில் வாழாத ஒரே ''பர்ஸ்ட் லேடி.''

## திடீர்ப் பிரமாணங்கள்

வில்லியம் மெக்கன்லி கடப்பட்டுக் காலமானபோது துணை ஜனாதிபதியாக இருந்த தியோடர் ரூஸ்வெல்ட் எங்கோ மௌண்ட் மொர்ஸி மலையில் மலையேறும் கோஷ்டி ஒன்றுடன் போய்க் கொண்டிருந்தார்.

அவரைக் கண்டுபிடித்துக் கையோடு அழைத்து வருவதற்காக உடனேயே ஆட்கள் பறந்தார்கள். தேடோ தேடென்று தேடிக் கடைசியில் கண்டுபிடித்துச் சேதியைச் சொன்னபோது அவரால் நம்பவே முடியவில்லை.

அந்த வனப் பிரதேசத்திலேயே ஓர் எருமை மேய்ப்பவரின் சிறு குடிலில் அவர்







## வந்தியத்தேவன் வளர்த்த தமிழ்!



லண்டன் பி. பி. ஸி யின் 'தமிழோசை'ப் பேட்டி ஒன்றில், ஸலீமா என்ற முஸ்லிம் பெண்மணி ஒருவர் 'தமிழ் எழுதப் படிக்கத் தெரியாமல் இருந்த நான் 'கல்கி'யில் முதன் முறையாகப் 'பொன்னியின் செல்வன்' வந்த நேரத்தில் அந்த அற்புதமான நாவலைப் படிக்கவென்றே தமிழ் படித்தேன்' என்று (பொன்னியின் செல்வன் நாவலை எழுத்துக் கூட்டிப் படித்தே தமிழைக் கற்றதாக)த் தெரிவித்தார்.

கோவை முறையை அனுசரித்துப் படிக்காமல் இருந்த இவர், இன்று தனிப்பட்ட முறையில் படித்து எம். ஏ. பாஸாகி இருப்பதுடன் லண்டன் செல்லும் அளவுக்கும் முன்னேறியிருக்கிறார்.

— கே. பாரதசெல்வி

●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●

பிரமாணம் மேற்கொண்டு ஜனாதிபதியாகிப் பிறகே வாஷிங்டனுக்கு வந்து சேர்ந்தார்.

கால்வின் கூலிட்ஜ் உபஜனாதிபதியாக இருந்தபோது வெர்மாண்டிலுள்ள பிளைமவுத் என்கிற ஊருக்கு விடுமுறையைக் கழிக்கத் தம் குடும்பத்துடன் வந்திருந்தார்.

ஓர் அவசரத் தந்தி வந்து 'ஜனாதிபதி வாரன் ஹார்டிங் காலமாகி விட்டதாக'ச் செய்தி சொல்லிற்று. அவர் அந்த நிமிடமே நாட்டின் ஜனாதிபதியாகி விட்டார்.

பிளைமவுத் வீட்டிலேயே அவர் பதவிப் பிரமாணம் எடுத்துக் கொண்டார். இதில் வேடிக்கை என்ன தெரியுமா? பதவிப் பிரமாணச் சடங்கை நடத்தி வைத்தவர் அவருடைய சொந்தத் தந்தையேதான்.

உதவி ஜனாதிபதியாக இருந்த செஸ்டர் ஏ. ஆர்தர் ஒரு நாள் 'ஓ! விடிந்து விட்டதே!' என்று சொல்லிக் கொண்டே எழுந்து சென்று வாசற் கதவைத் திறந்தார். அவர் கதவைத் திறக்கவும் உள்ளூர்ப் பத்திரிகை நிருபர் ஒருவர், 'வணக்கம் மிஸ்டர் பிரஸிடெண்ட்' என்று சொல்லவும் சரியாக இருந்தது. ஆர்தருக்கு ஆச்சரியம் தாளவில்லை.

ஜனாதிபதி ஜேம்ஸ் கார்பீல்ட் காயமடைந்த செய்தியை ரிப்போர்ட்டர் சொல்லி இவர் ஜனாதிபதியாக ஆகிவிட்டதற்காக வாழ்த்தும் தெரிவித்தபோது ஜேம்ஸ் அப்படியே திகைத்துப்போய்த்தான் நின்று கொண்டிருந்தார். பிறகு வரவேற்பறையில் பத்திரிகைகளைப் பார்த்ததும்தான் அவருக்கு நம்பிக்கை வந்தது.

அன்று மாலை வரவேற்பு அறையிலேயே அவர் பிரமாணம் எடுத்துக் கொண்டு ஜனாதிபதியானார்.

ஒரு ஜனாதிபதி காலமாகி உதவி ஜனாதிபதியாக இருப்பவர் மிகக் குறுகிய கால இடைவெளிக்குள் ஜனாதிபதியான சம்பவம் லிண்டன் பி. ஜான்ஸன் ஜனாதிபதியான சம்பவம்தான்.

கென்னடி சுடப்பட்டுக் காலமான 98 நிமிஷம் ஆவதற்குள் டெக்ஸாஸிலுள்ள டல்லஸ் விமான நிலையத்தில், ஒரு விமானத்தினுள் ஜான்ஸன் பதவிப் பிரமாணம் மேற்கொண்டார்.

அவர் ஜனாதிபதியானபோது அவர் காதில் ஒலித்த ஒரே குரல் — பக்கத்தில் தாளாத் துயரத்தால் விம்மிக் கதறிக்கொண்டிருந்த ஜாக்குலினின் குரல்தான்.

### பென்ஷன்

அமெரிக்க ஜனாதிபதிகளுக்குப் பென்ஷன் அளிக்கும் முறை 1958ம் ஆண்டு ஐஸன்ஹோவர் ஜனாதிபதியாக இருந்தபோதுதான் ஆரம்பமாயிற்று. அதன்படி முன்னாள் ஜனாதிபதிகளுக்கு ஆண்டு ஒன்றுக்கு 25 ஆயிரம் டாலர்களும், அவர்களுடைய விதவைகளுக்கு ஆண்டு ஒன்றுக்கு 10 ஆயிரம் டாலரும் பென்ஷன் கிடைக்கும். இது தவிர இலவசத் தபால் வசதி, இலவச ஆபீஸ் இட வசதியும் அளிப்பதுடன், ஆபீஸ் செலவுக்காக ஆண்டு ஒன்றுக்கு 50 ஆயிரம் டாலரும் அளிக்கப்பட்டது. முதன் முதல் பென்ஷன் தொகையைப் பெற்ற அமெரிக்க முன்னாள் ஜனாதிபதிகள் ஹெர்பர்ட் ஹூவரும் ஹாரி ட்ருமனும்.

அமெரிக்க ஜனாதிபதிகளில் ஒரே ஒருவர்தான் பிரம்மச்சாரியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டுத் தம் பதவிக் காலம் முழுவதும் பிரம்மச்சாரியாகவே இருந்தார். ஜேம்ஸ் புக்கானன்தான் அவர். தம் 28ம் வயதில் புக்கானன், ஆன் கரோலின் கால்மன் என்ற பெண்ணை நேசித்து மணப்பதாக இருந்தார். ஆனால் தம் 23ம் வயதில் அந்தப் பெண் அளவுக்கு மீறி ஏதோ 'மருந்தை'க் குடித்துவிட்டதால் உயிர் துறந்து விட்டாள். புக்கானன் அதன் பின் மணம் செய்து கொள்ளவேயில்லை. க்ரோவர் கிளீவ்லண்ட் தேர்ந்தெடுக்கப்படும்போது பிரம்மச்சாரியாக இருந்தார். ஜனாதிபதியானதும் பிரான்ஸிஸ் பால்ஸம் என்கிற பெண்மணியை வெள்ளை மாளிகையில் மணம் செய்துகொண்டார்.

### ரொம்பக் குள்ளமும் பெரிய குடும்பமும்

அமெரிக்க ஜனாதிபதிகளிலேயே மிகக் குள்ளமானவர் நாலாவது ஜனாதிபதியான ஜேம்ஸ் மாடிசன்தான். மாடிசன் ஐந்து அடி நாலங்குல உயரமே இருந்தார். எடை நூறு பவுண்ட். அமெரிக்க ஜனாதிபதிகளில் மிக உயரமானவர் ஆப்ரஹாம் லிங்கன்தான். ஆறு அடி நாலு அங்குலம்.

பெரிய குடும்பியான அமெரிக்க ஜனாதிபதி ஜான் டெய்லர். அவருக்குப் பதினைந்து குழந்தைகள். மூத்த மனைவி மூலம் மூன்று மகன்களும் ஐந்து மகள்களும், இளைய மனைவி ஜூலியா கார்ட்னர் மூலம் ஐந்து மகன்களும் இரண்டு மகளும் அவருக்கு இருந்தார்கள். அவருடைய கடைசிக் குழந்தை அவருடைய 70ம் வயதில் பிறந்தது. வெள்ளைமாளிகையை விட்டு இந்தக் குடும்பம் போனபோது ஒரு பட்டாளமே போவது போலிருந்தது!

---

டெல்லி சிறைச்சாலையில் டெலிவிஷன் பார்த்த ஒரு கைதி சொன்னது: 'இதுவும் தண்டனையின் ஒரு பகுதி என்றுதான் நினைத்தேன்!'

— பிலிம்பேர்—பாலி

பொங்கிவரும் புது நுரைவளம்

# பாண்ட்ஸ் ஷாம்பூ

தூய நீராட்டு, துலக்குவதில் சீராட்டு

நீண்டு அடர்ந்த கூந்தலுக்கும் நிர்மலப் பொலிவு...
நேர்த்தி மிளிரும் பரிசுத்தம்




எத்தனை முழ நீளமாயினும் சரி, குழல் முழுவதையும் குமிழ் நுரையில் மூழ்கடித்து செழுமை பொழிவது பாண்ட்ஸ் ஷாம்பூ. நீடித்துநிற்கும் நுரைச் செல்வம், கூந்தலுடன் கூடிக் குலவும், அடி முதல் நுனி வரை முடிமீது பரிசுத்தம் சுடர்வீசச் செய்திடும்

எந்த வகையான சிகைக்கும் ஏற்ற வகையறிந்து வழங்குகிறது பாண்ட்ஸ்: பியூட்டி, எக், டானிக், அல்லது லெமன். மணம்புரிய வைப்பீர் உங்கள் தோகையிலே பாண்ட்ஸ் ஷாம்பூ. துலங்கட்டும் இந்த அழகு கேசம், துலங்கட்டும் உங்கள் கேசம்.

சீஸ்பரோ-பாண்ட்ஸ் இன்க். (வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் அமெரிக்காவில் இணைக்கப்பட்டது).

# 5,00,000

# மகிழ்ச்சிகரமான வாடிக்கையாளர்கள்

என்றால் 1,00,000 மகிழ்ச்சிகரமான குடும்பங்கள். அவர்களுக்கு ஒரு தொல்லையின்றி இயங்கும் கெல்வினேட்டர் ரெப்ரிஜிரேட்டர் வாங்கியதற்கு ஒரே மகிழ்ச்சி. அவர்களுடைய நண்பர்கள் அதை தேர்ந்தெடுத்ததற்கு பாராட்டுகளை பெற்றதற்கு மகிழ்ச்சி. ஸ்பென்ஸர் அவர்களின் நம்பிக்கையான சேவைக்காக மகிழ்ச்சி.

ஒவ்வொரு கெல்வினேட்டரும் ஸ்பென்ஸர் அவர்களின் அனுபவமுள்ள சேவையுடன் கூடியுள்ளது. இந்தியா முழுவதும் ஸ்பென்ஸர் அவர்கள் நம்பிக்கையான, உயர்ந்த, மற்றும் பணிவன்புடன் கூடிய விற்பனைக்குப் பிறகு சேவை - மற்றொரு உறுதி - நீங்கள் ஒரு முறை இதை வாங்கினால் என்றுமே அதை மறக்கமாட்டீர்கள். அது நீங்காத நினைவு.- கெல்வினேட்டர் மகிழ்ச்சியூட்டும் பொருள் என்று நீங்கள் அறிவீர்.

கெல்வினேட்டரின் இதர சிறப்புகள்

- அதிக இட வசதியுடன் கூடியது
- சிங்கிள் மௌல்ட் லைனிங்
- மாக்னெடிக் கதவு காஸ்கட்
- போலார்ஸ்பேர் கம்ப்ரெஸர்
- அழகான, க்ரோம் கோடுகளுள்ள டிசைன்

## கெல்வினேட்டர்

286, 165, 135 மற்றும்
65 லிட்டர் அளவுகளில் கிடைக்கும்.

## ஸ்பென்ஸர்ஸ்

-1865லிருந்து சேவை செய்வதே வாழ்க்கையின் நோக்கமாக கொண்டது.

ஸ்பென்ஸர் & கம்பெனி லிமிடெட்

153, மவுண்ட் ரோடு, சென்னை-600 002
19-A அலிபூர் ரோடு, டில்லி-110 006
ஸ்பென்ஸர்ஸ் பில்டிங்
போர்ஜெட் தெரு, பம்பாய்-400 036
டைமண்ட் ஹார்பர் ரோடு
கித்தேர்பூர், கல்கத்தா-700 023

எல்லா கெல்வினேட்டர் ரெப்ரிஜிரேட்டர்களும் ஐஎஸ்ஐ சர்டிபிகேட்டைப் பெற்றுள்ளன.



நினைத்த நிமிடத்தில் பொருட்களை எடுத்துக்கொள்ளலாம் - அதுதான் ஸ்பென்ஸர்ஸ் கெல்வினேட்டர்.

அமரர் **கல்கி**யின்

இது வரை

பிரசுரமாகாத

புதிய நாவல்

# அரும்பு அம்புகள்

எப்ரல் 18ஆ சித்திரை சிறப்பிதழில் ஆரம்பம்

மணியம் செல்வன்

# அறிவின் வழியில் ஒரு கோடு!

11

கதை: கௌசிகன்

சித்திரம்: ம.செல்வன்

திடீரென்று பெருங்காற்று 'ஊ ஊ' என்று ஊளையிட்டபடி வீசிற்று. ஏரி நீர் பொங்கி 'ஹோ' என்று பேரிரைச்சலிட்டது. பாய்மரத்தை இறுக்க மாதவனும் சாருவும் படாத பாடுபட்டனர். பிடிக்க நில்லாததால்......



....முடியவில்லை.




ஊதிக் காற்று படகைப் பந்தாடியது. சாரு ஏரி நீரிலே தூக்கி எறியப் பட்டாள்.




புழுதி சூழ்ந்து இருள் கவிந்தது. 'ஊ ஊ' என்று ஓலமிடும் காற்று, குதிபோடும் அலைகள். கவிழ்ந்த படகைப் பற்றிக் கொண்டு, சாரு தன் பிடியைத் தளரவிடவே இல்லை.




நடுக்கும் குளிர், தன்னுடலெங்கும் தளர்ச்சி. ஆனால் கடைசியில்....




தண்ணீரில் தத்தளிக்கும் போது தெம்பு முழுவதையும் ஒன்று திரட்டிக் கொண்டு போராடியதினால் கரை ஏறிய சாருவின் கால்கள் துவண்டன. மணலில் காலூன்றி நடக்க முடியாமல் மயங்கி விழுந்தாள்.




நினைவு திரும்பிக் கண் திறந்த போது.
நீங்கள் யார்? என்னை எங்கே கொண்டு வந்திருக்கிறீர்கள்?
யா... யா... தோ...


இவர்களுடைய முகபாவங்களிலிருந்து இவர்கள் நண்பர்களா விரோதிகளா என்பதைத் தெரிந்து கொள்ள முடியவில்லை. இவர்கள் மொழியும் புரியவில்லை.


கிராமத்திலுள்ள ஒரு வீட்டிற்குள் போகும்படி சைகை காட்டுகிறான் ஒரு கிராமவாசி.
மாதவனையும் நான் இவர்களிடம் இழந்துவிடுவேனா? அது என் புதிய சிறைச்சாலையா?


ஆனால் அவ்வீட்டினுள்ளே போன போது...
மாத...வ...ன்...!
சாரு.. சாரு! என் பிரார்த்தனை வீண் போகவில்லை. கடவுள் கருணை காட்டிவிட்டார்.


ஏரிக்கரையில் ஒதுங்கி நினைவிழந்து கிடந்த என்னைக் கிராமவாசிகள் தூக்கி வந்து சிகிச்சையளித்தார்கள். நல்லவர்கள். எனக்கு நினைவு வந்ததும் உன் நிலை என்னவோ என்று பதறிப் போனேன். ஏரிக்கரைகளில் உன்னைத் தேடிப் பார்க்க இவர்களை அனுப்பினேன்.
என்னை இழக்காமல் காப்பாற்றிய அந்தப் படகுக்கு நான் கடமைப்பட்டிருக்கிறேன். மாதவன்... அது... அதென்ன ஓசை? விமானம் போலிருக்கிறதே.


ஹெலிகாப்டர். நாம் தப்பி விட்டதை அறிந்த வஞ்சன் இந்தப் பிராந்தியத்தில் நம்மைத் தேடிப்பிடிக்க இதன் உதவியோடு வந்திருக்கிறான் போலும்.
இதோ இங்கே தான் அருகே அது இறங்கப் போகிறது மாதவன்.

தொடரும்-

# நியாயங்கள்

"**இ**ன்று கட்டாயம் வந்துவிடுவார்..."

வாணி வாசலையே பார்த்துக் கொண்டிருந்தாள்.

அவளுடைய சிநேகிதிகள் பலர் அந்த ஹாஸ்டலில் இருக்கின்றனர். ஒவ்வொரு வாரமும் அவர்களைப் பார்க்க வீட்டிலிருந்து அவர்களுடைய பெற்றோர் வருவதுண்டு.

வாணிக்கும் பெற்றோர்கள் வருவார்கள்.

ஆனால் லீலா மாதிரி, நளினி மாதிரி, ஸ்வரூபா மாதிரி —

"என் 'பேரண்ட்ஸ்' வந்தாங்க" என்று அவளால் மகிழ்ந்து ஒரே நாளில் சொல்ல முடியாது. காரணம்...?

அவளைக் காண அவள் அப்பா ஞாயிற்றுக் கிழமை வருவார்.

அம்மா சனிக்கிழமை வருவாள் !

'ஹாஸ்டலில்' இருந்தால் 'டிஸிப்ளின்' வரும் என்று அவளை அங்கே சேர்த்தார்கள் !

அவள் அங்கு சேர்த்தும்கூட அவள் பெற்றோர்களுக்கு 'டிஸிப்ளின்' வரவில்லை !

என்றாவது லீவில் வீட்டுக்கு வந்தால்....

வீட்டில் அம்மா, அப்பா போட்டுக் கொள்ளும் சண்டை மண்டை உடையும்! இந்த வீட்டைவிட, கண்டிப்பும், கண்ணும் இயந்திர வாழ்வும் நிறைந்த அந்த 'ஹாஸ்டல்' சிறை எத்தனையோ தேவலை என்று தோன்றும்.

சண்டை பூசல் பிடித்துக் கொண்டாலும் அங்கே அப்பாவும் அம்மாவும் இருவருமாகச் சேர்ந்துதான் அவளைப் பார்க்க வருவார்கள்.

அன்று, அதிசயமாய் ஒரு நாள் முன்னதாக அம்மா மட்டும் 'தனியாக' வந்தாள்.

அவள் கண்கள் சிவந்திருந்தன.

அப்பாவுக்கும், அம்மாவுக்கும் சண்டையோ ?

வாணியால் யூகிக்க முடியவில்லை. அப்படித்தான் நடந்திருக்கும் என்று எண்ணினாள்.

அம்மா அழுதபடி சொன்னாள். அவள் அப்பா வேறு கல்யாணம் செய்து கொள்ளப் போகிறாராம் ! அதனால் அம்மாவை 'டைவர்ஸ்' செய்யப் போகிறாராம்! 'கோர்ட்'டில் வழக்கு நடக்குமாம் ! அப்போது வாணியைக் கேள்வி கேட்டால், "நான் அம்மாவிடம்தான் இருக்கப் போகிறேன்" என்று சொல்ல வேண்டுமாம் !

அம்மா அழுதபடி சொன்னாள்.

வாணிக்கும் அழுகை அழுகையாக வந்தது.

ஆனால் கூடவே கோபமும் வந்தது.

அப்பா இரண்டாம் கல்யாணம் செய்து கொள்ளப் போகிறாரா ? ஏன்?

வாணிக்குப் புரியவில்லை !

அம்மாவைப் பார்த்தால் அவளுக்குப் பாவமாக இருந்தது. அவளுக்கு அம்மா மீது கொள்ளை ஆசை. பாசம் எல்லாம் இருந்தது.

அம்மா ரொம்ப ரொம்ப அழகாகக் கதை சொல்லுவாள். லீவுக்கு வீட்டுக்கு வந்தால் அம்மா எத்தனை கதை சொல்லி, அவளைத் தூங்க வைத்திருக்கிறாள்.

ஆனால் இந்தக் கதைகளை நிரந்தரமாகக் கேட்க முடியாமல் 'ஹாஸ்டல்' வாசம் !

பாதி நாட்கள் கதை சொல்லிக் கொண்டிருக்கும்போது —

" எனக்குச் சாப்பாடு போடாமல் அங்கே என்ன அரட்டை. ?" — அப்பா கத்துவார்.

"குழந்தை வந்திருக்கிறாள். நம் சாப்பாடு தான் தினமும் இருக்கிறதே..."

"தடிக் கழுதை... எதிர்த்தா பேசுகிறாய் ? உன் குழந்தையை அப்புறம் கொஞ்சு... எனக்கு முதலில் சாப்பாடு போடு..."

"அங்கேதானே வைத்திருக்கிறேன்....... நீங்களே எடுத்துப் போட்டுக் கொள்ளுங்கள். பாதிக் கதை சொல்லிக் கொண்டிருக்கிறேன்...."

சாப்பாட்டுத் தட்டு தூக்கி வீசி எறியப்படும் ஓசை !

கதையில் வந்த பூதம் ராஜகுமாரியைத் தூக்கிக் கொண்டு எங்கே போயிற்று ? — என்கிற பயங்கரத்தைவிட இந்தக் காட்சி ரொம்பக் கொடுமையானது! வாணி மெல்லச் சொல்லுவாள் —

"அம்மா, அப்பா கோபமாக இருக்கார்... நீ அப்புறம் கதை சொல்லு. உள்ளே போம்மா..."

"சரிதான் போடி... அதென்ன அப்படி ஓர் ஆணவம்? நானென்ன இவர் வைத்த சமையல்காரியா ? இதைக்கூட ஓர் ஆண்



பின்னே 'அட்ஜஸ்ட்' செய்யவில்லையானல் என்ன மனிதர்.... நீ கதை கேளு...''

அம்மாவுக்குக் கதை சொல்லும் சுவாரசியத்தைவிட அப்பாவைப் பழி வாங்கிய மகிழ்வு தான் அதிகம் இருக்கும் !

இந்த அம்மாவை, அப்பா 'டைவர்ஸ்' செய்துகொண்டு இன்னெருத்தியைக் கல்யாணம் செய்து கொள்ளப் போகிறாராம் !

தாய் மகளிடம் பிச்சை யாசிக்கிறாள்—

'நீ என்னை விரும்புவதாகச் சொல்' என்று!

கோர்ட் என்று போய்விட்டால் 'நிஜங்களை'விடச் 'சாட்சியங்களுக்கு'த்தான் மதிப்பு அதிகம்.

அன்றிலிருந்து அம்மா சனிக்கிழமை வர ஆரம்பித்தாள். தனித்து வர ஆரம்பித்தாள்.

மறு நாள் அப்பா வந்தார்.

''உன் அம்மா என்னிடம் சண்டை போட்டுக் கொண்டு வீட்டை விட்டுப் போய்விட்டாள். என்னைக் கண்டால் பிடிக்கவில்லையாம். வாணி, எங்கள் சண்டையால் உன் எதிர்காலம் பாழாக்கப்படக் கூடாது. நீ நன்ருகப் படிக்க வேண்டும். உன்னை நான் படிக்க வைக்கிறேன். 'கோர்ட்டில்' கேட்டால் நீ என்னை விரும்புவதாகவும், என்னிடம் இருக்க விரும்புவதாகவும் சொல் ! என்ன?''

அம்மா பாசத்தைக் காட்டிப் பிச்சை கேட்கிறாள் !

அப்பா பணத்தைக் காட்டி மிரட்டுகிறார்.

''கோர்ட்'' கேட்டபோது வாணி சொன்னாள்.

'' நான் பிறந்து விவரம் தெரிந்ததிலிருந்து 'ஹாஸ்டலில்'தான் இருக்கிறேன். என்னைப் பொறுத்தவரை இந்த 'ஹாஸ்டல்'தான் என் தாய் வீடு, தந்தை வீடு எல்லாம் ! நான் இங்கேயே இருந்து கொள்கிறேன். எனக்கு யாரையும் பார்க்க வேண்டாம் ! அவர்களுக்கு வேண்டுமானல் ஆளுக்கொரு நாள் வந்து என்னைப் பார்க்கட்டும்....''

சின்னஞ் சிறிய பெண்ணின் பேச்சைக் கேட்டுக் 'கோர்ட்டே' பிரமித்தது.

அவள் செலவுகளுக்கு அவள் தந்தை பணம் கொடுத்து வந்தார்.

அவள் தாயும் ஏதோ வேலைக்குப் போய் விட்டாளாம்! அவளும் சம்பாதித்தாள். இருவரும் ஆளுக்கு ஒரு நாள் அவளைப் பார்க்க வந்தனர் !

அவள் தந்தை மறு மணம் செய்து கொண்டு விட்டார்! ஒரு நாள் 'அவளை' அழைத்து வந்திருந்தார்.

வாணி அலட்சியமாகப் பார்த்தாள் !

''சித்திரை நமஸ்காரம் செய்'' என்ருர்.

அவள் காது கேட்காத மாதிரி இருந்தாள்.

''உன்னைத்தான் வாணி... நமஸ்காரம் செய்....''

'' யாரை ?''

''சித்திரை....''

''சித்தியா? அம்மாவின் தங்கையா?''

''இல்லை... என் மனைவி....''

''யூ மீன் செகண்ட் ஒய்ப்...''

அவர் ஒரு கணம் தடுமாறினர்...

''யெஸ்....''

''தேவையில்லை அப்பா.... இந்தப் புதிய உறவு.... உங்களுக்காக! உங்கள் பலவீனத்துக்காக! உடலுக்கு முக்கியத்துவம் கொடுக்கும் இந்த உறவுக்கு நானும் மரியாதை தர



**கல்கி சந்தா விவரம்**

| | ஒரு வருடம் ரூ. பை. | ஆறு மாதம் ரூ. பை. |
|---|---|---|
| இந்தியா | 38-00 | 19-00 |
| இலங்கை (இலங்கை நாணயம்) | 38-00 | 19-00 |
| இதர வெளி நாடுகள் | 90-00 | 45-00 |

வேண்டும் என்பதில்லை! நாளைக்கே இவளையும் 'டைவர்ஸ்' செய்துவிட்டு இன்னொருத்தியைக் கொண்டு வந்து நிறுத்துவீர்கள்! என்னால் முடியாது! என்னை விட்டுவிடுங்கள்!''

அவருக்கு முகத்தில் அறைந்த மாதிரி ஆகி விட்டது...

'அவளும்' ஒரு கணம் திகைத்தாள்.

''சின்னப் பெண்... கோபமாக இருக்கிறாள்..... விட்டு விடுங்கள்....'' — என்றபடி போய்விட்டாள்.....

அதற்குப் பிறகு அவள் வரவில்லை !

அப்பா வந்து கொண்டிருந்தார்.

'கோர்ட்' நிறைவேற்றச் சொன்ன சட்டத்தைக் காப்பதற்காக, அல்லது தம் பெருமைகளை நிலைநாட்ட, அல்லது தம் வெற்றியின் மகிழ்வைப் பறைசாற்ற. நம்மை நல்லவராகச் சமூகத்தின் கண்களில் நிலைநிறுத்திக் கொள்ள...

அம்மாவும் வருவாள்....

அவள் வந்தால் முதல் கேள்வி —

''போன வாரம் அவர் வந்தாரா?'' என்பதுதான்.

''நான் ஒரு வாரம் தவறாமல் உன்னை வந்து பார்க்கிறேன், உன் அப்பாவுக்கும் அந்த அளவுக்குப் 'பாசம்' இருக்கிறதா?'' என்பதைக் கேள்வி கேட்டுப் பரிசீலிக்க விரும்பினாள்.

''அவர் என்றால் யார்?'' — வாணி கேட்பாள்.

அம்மா தயங்கி....

''அவர்....அதுதான்....உன் அப்பா''

''ஓ! அதெல்லாம்கூட உனக்கு நினைவு இருக்கிறதா?''

''அதென்ன அப்படிச் சொல்லிவிட்டாய்? அவர்தான் என்னை வெறுத்தார், நான் அவரை வெறுக்கவில்லை.''

''அப்படியென்றால் உன் அன்பைக் காட்டி அவரை உன் பக்கம் கொண்டு வந்திருக்கலாமே !''

''அது அன்புக்குக் கட்டுப்படாத ஜன்மம்!''

''அந்த மாதிரி ஜன்மங்களைப் பற்றி என்ன கேள்வி?'' முகத்தில் அடித்தாற் போல் வாணியின் பதில் வரும்.

அம்மாவும் என்ன என்னவோ ஆசை ஆசையாய்ப் பண்ணிக் கொண்டு வருவாள்.

அப்பாவுடன் வந்த 'அவளுக்கு' வாணி கொடுத்த பதிலைக் கேட்டு அம்மாவுக்கு மனத்தில் ரொம்ப மகிழ்ச்சி.

''நல்ல வேலை செய்தாய். இப்படிப்பட்ட ரோசம் கெட்டவர்களுக்கு அப்படித்தான் பதில் தர வேண்டும்'' என்றாள்.

''நான் அதற்காகப் பதில் தரவில்லை.... நீதான் அடிக்கடி சொல்லுவாய்.... ஆண் பிள்ளை மட்டும் என்ன உசத்தி என்று. சமூகம் ஆணுக்கு அளித்திருக்கிற பல உரிமை பெண்களுக்குக் கிடையாதா ? ஒரு வேளை அப்பா சம்மதித்தால் நீ...''

''வாணி!''

அம்மா அதிர்ந்து போய் அலறினாள்.

கொடுமைக்காரி என்று வாணியை அம்மா மனத்துள் திட்டி இருப்பாளோ? இல்லை... திமிர் பிடித்தவள் என்று நினைத்திருப்பாளோ?

''வாணி... என்னதான் கோபம் இருந்தாலும் எதைத்தான் பேசுவது என்கிற முறை இல்லையா ?''

'' அப்பாவிடம் நான் இப்படிப் பேசியதற்குப் பெருமைப்பட்டாயே, அம்மா....''

''அது.... அது... வந்து... ஆண் பிள்ளை சமாசாரம்.....''

''அப்போ... சிலவற்றுக்குச் சில எல்லைகள் இருக்கிறது என்பதை நீயே உணர்கிறாய், இல்லையா? அப்பா எல்லைகளை மீறும்போது தட்டிக் கேட்க உன்னால் முடியவில்லை! காரணம்... நீ சில உரிமைகளிலிருந்து விலகிவிட்டாய்; அல்லது விலக்கப்பட்டவளாக நீயே கருதிக் கொண்டு விட்டாய்! நீ நினைத்திருந்தால் அன்பைக் கொடுத்து அன்பைப் பெற்றிருக்க முடியும்.... நீயாக ஜடமென்று சில ஜன்மங்களை விலக்கி ஒதுக்கிறாய்! இன்று நீயே ஜடமாகி ஒரு 'ஜன்மமாக' இருக்கிறாய்! நீ உன் தரப்பு நியாயத்தையும், அப்பா தம் தரப்பு நியாயத்தையும் என்னிடம் சொல்லி, உங்கள் கருத்துக்களை என் மீது சுமத்தினீர்கள். அப்போது நீங்கள் இருவரும் சேர்ந்து இருக்க வேண்டுமே என்ற காரணத்தால் நான் இருவருக்குமே ஒன்றும் சொல்ல முடியாதவளாகி இருந்தேன்.... உனக்காகப் பரிந்து பேசினால் அப்பாவும், அப்பாவைப் பற்றிச் சொன்னால் உனக்கும் கோபம் வரும்! இப்போது நீங்களே பிரிந்துவிட்டீர்கள்! நான் இனி தைரியமாகப் பேசலாம் அல்லவா ?''

அன்று அம்மா அழுதுகொண்டே போய் விட்டாள் !

அம்மாவையும், அப்பாவையும் குத்திப் பார்ப்பதில் வாணிக்கு ஒரு தனி மகிழ்ச்சி.

அப்படிச் செய்து பார்க்கும்போது ஒரு மாபெரும் நீதிபதியின் ஸ்தானத்திலிருந்து ஒரு தண்டனை வழங்கிய நிம்மதி.

இது அவள் தரப்பு 'நியாயம்' !

ஆயிற்று... வருடங்கள் ஐந்து ஓடிவிட்டன. இந்தக் கண்ணாமூச்சி விளையாட்டில் அவள் கல்லூரிப் படிப்பும் முடிந்துவிட்டது !

இன்னும் ஒரே ஒரு மாதம்தான் ! அதற்குப் பிறகு அவள் எங்கே போவாள்? இந்த 'ஹாஸ்டலை' விட்டு எங்கே போவது? வர வர அப்பாவிடம் ஒரு தளர்ச்சியை அவளால் பார்க்க முடிகிறது. அம்மாவிடம் ஒரு வேதனையை அவளால் உணர முடிகிறது.

இது அவர்கள் தங்களுக்குள் போட்டுக் கொண்ட பலப் பரீட்சையின் முடிவு! இல்லை தீர்ப்பு !

இன்று ஞாயிற்றுக்கிழமை !

அப்பா வர வேண்டிய நாள்!



"30 அடிக்கும் நீளமான பாம்பு ஒன்றை உயி ரோடு கொண்டு போய்க் காட்டினால் நியூயார்க் நகர மிருகக் காட்சி சாலை சுமார் 40 ஆயிரம் ரூபாய் பரிசு தருவதாக அறிவித்திருக்கிறார்கள்."

இது 'டிட்பிட்ஸ்' பத்திரிகையில் வந்த ஒரு துணுக்கு. அப்படியானால் பாம்புகள் 30 அடி நீளத்துக்கு மேல் கிடையாதா?

சென்னை கிண்டியில் இருக்கும் பாம்புப் பண்ணை யில் கிடைத்த விவரங்கள்:

இந்தியாவில் இருக்கும் பாம்புகளில் ராஜ நாகம் அதிகபட்சம் 18 அடி நீளம் வரை வளரும். 'ராக் பைத்தன்' (Rock Python) என்ற இந்திய மலைப் பாம்பு ரகம் 20 அடி வரை வளரும். தென் அமெரிக்காவில் 'அனகோண்டா' (Anaconda) என்ற மலைப் பாம்பு 30 அல்லது 35 அடி நீளம் வரையில்கூட வளரும். -கே.ஆர்.

---

நேற்று, சனிக்கிழமை — அம்மா வரவேண் டிய நாள், வரவில்லை, ஏன்? ஒரு வேளை அம்மாவும்......?

வாணி வாசலைப் பார்த்தபடி காத்திருந் தாள்.

ஆரம்பத்தில் வாணியின் சிநேகிதிகளுக்கு அப்பா ஒரு நாளும், அம்மா ஒரு நாளும் வரும் 'விசித்திரம்' கவையாக இருந்தது!

நாளடைவில் அந்தச் சுவாரசியமும் மறைந்து போயிற்று!

எல்லாமே ஆரம்ப சுவாரசியங்கள்! அதோ அதோ 'கார்' வந்துவிட்டது! அப்பாவின் கார்!

வாணி பார்த்துக் கொண்டேயிருந்தாள்.

அட! இதென்ன மாயம்!

அப்பாவுடன் கூட வருவது? அவள் தாய்!

ஆமாம் அவள் அம்மாதான் முன்சீட்டி லிருந்து இறங்குகிறாள்!

அவர்கள்.... அவர்கள் இணைந்துவிட் டார்களா?

அம்மாவும், அப்பாவும் சிரித்தபடி ஒரு வரையொருவர் பார்த்தபடி வந்தனர்...

ஓ! அதுதான் அம்மா சனிக்கிழமை, நேற்று வரவில்லையோ?

''வாணி!''

அம்மா, அப்பா இருவருமே இணைந்து ஒரே குரலில் அழைத்தனர்!

''வாணி நேற்று என்னால் வர முடியவில்லை. இன்று வரலாம் என்று வந்தேன். 'இவர்' வரும் நாள் என்பது தெரிந்தும் பரவாயில்லை என்று வந்தேன். பார்த்து ஐந்து வருடங்கள் ஆகிவிட்டனவே... ஒருமுறை பார்த்தால் தப்பில்லை என்றுதான் வந்து கொண் டிருந்தேன். வழியில் இவருடன் காரில் ஏறிக் கொண்டேன்.''

'' நானும் காரில் ஏதேதோ யோசித்தபடி வந்தேன்.... வாணி, நீ சொன்ன மாதிரி என் 'வீக்னஸை' நினைத்துக் கொண்டு. நான் உனக்கு அறிமுகப்படுத்திய 'அவள்' என்னை விட்டுப் போய் ஒரு மாதமாகிவிட்டது. இதை உன்னிடம் சொல்லி உன் அனுதாபத்தை நான் பெற விரும்பவில்லை!''

''மனைவியை இழந்து உன் அப்பா 'தனி யாக' இருக்கிறார் என்கிற செய்தியை அவர் காரில் வந்த போது என்னிடம் சொன்னார். எனக்கு ரொம்பக் கஷ்டமாக இருந்தது. நானும் தனியாகத்தானே இருக்கிறேன்..''

''வாணி..! உன் அம்மாவிடம் சொல்லு... இனி யாருமே தனியாக இருக்க வேண்டாம். நாமெல்லாம் ஒன்றாக இருக்கலாம்....''

''ஆமாம், வாணி... உனக்கும் படிப்பு முடியப் போகிறது. நீயும் எங்களுடனேயே வந்துவிடலாம்.... நாம் எல்லாரும் ஒன்றாக இருக்கலாம்....''

''உனக்கும் ஒரு நல்ல இடத்தில் கல்யாணத் துக்கு ஏற்பாடு செய்கிறேன் வாணி.... இப்போது என்னிடம் எந்தவிதமான 'வீக்-னெஸ்ஸும்' இல்லை.... இனி ஒன்றாக இருப்பதில் தடையில்லையே....''

மாறி மாறி அம்மாவும், அப்பாவும் பேசு வதை வியப்புடன் கேட்டுக் கொண்டிருந்தாள் அவள்! அவர்கள் பிரிவுக்கு ஒரு 'கோர்ட்' தேவைப்பட்டது! ஆனால் இணைப்புக்கு எதுவுமே வேண்டாமோ? அவர்கள் பிரிந்த போது வாணியைத் தன் பக்கத்தில் சேர்த்துக் கொள்ள ஒவ்வொருவரும் விரும்பினார்கள்...

இப்போது அவளைக் கல்யாணம் செய்து கொடுத்து வீட்டைவிட்டு 'அனுப்ப' இவர்கள் இணைகிறார்களோ? இதென்ன நியாயம்?

இப்போது 'வீக்னெஸ்' இல்லை என்று யார் சொன்னார்கள்? இப்போதும் வீக்னெஸ் தான்! பலஹீனம்தான்! வயதாகிவிட் டது! உடல் தளர்ந்துவிட்டது! உள்ளம் உறவைத் தேடுகிறது! இது பலவீனம் இல்லையா?

இந்தத் தள்ளாமையில் அப்பாவின் இய லாமைக்கு அம்மாவின் அருகாமை தேவை. அம்மாவின் தனிமைக்கு அப்பாவின் துணை தேவை. அவள் இனி யாருக்கும் தேவை இல்லை. அவள் வரவால் அவர்களின் தனிமை கெடக்கூடாது! அவர்கள் இப்போதுதான் 'வாழ' ஆரம்பித்திருக்கிறார்கள். அவள் குறுக்கிடக் கூடாது!

அவளுக்குத் தனிமையும், 'ஹாஸ்டல்' வாச மும் பழகிப் போன ஒன்று!

''என்ன வாணி, பதில் சொல்லமாட்டேன் என்கிறாய்? என்று வீட்டுக்கு வருகிறாய்?''

''சொல் வாணி... அப்பா கேட்கிறார், பார், சொல்......''

கண்களில் தூசி விழுந்த பாவனையாகக் கண்களைக் கசக்கினாள் வாணி. ''என்னுடைய இந்தப் படிப்பு முடிந்ததும் என்னை இந்த ஹாஸ்டல் 'வார்டனாக' இருக்கச் சம்மதமா என்று எங்கள் 'பிரின்சிபால்' கேட்டிருக் கிறார். நான் 'சரி' என்று சொல்லிவிட்டேன். நான் இங்குதான் இருக்கப் போகிறேன்... ஆனால் ஒரு நாள் 'உங்கள்' வீட்டுக்குக் கட் டாயம் 'கெஸ்டாக' வருவேன். நிச்சயம்!''

அம்மா கொடுத்த ஸ்வீட்டை வாயில் போட்டபடி, அப்பா கொடுத்த பணத்தை 'ஹேண்ட் பேக்'கில் வைத்தபடி வாணி நிம் மதியாகத் தன் அறைக்குள் நுழைந்தாள்.

ஜானைப் பார்த்தால் போதையில் மிதப்பவனாகத் தோன்றியது. அவன் கைகளில் சில கடிதங்கள் இருந்தன; சில கீழே பரந்திக் கிடந்தன. ரூபா அச்சத்தை விட்டுவிட்டுப் பெண் சிங்கமென அவனை நோக்கி முன்னேறினாள். ஒரு மூலையில் சாத்தியிருந்த இரும்புக் கம்பியை எடுத்துக் கொண்டாள். அதைக் கண்ட ஜான் பாய்ந்து அதைப் பிடுங்கி எதிர் மூலைக்குக் கலவேகமாக விட்டெறிந்தான்.

''பைத்தியம் பிடித்துவிட்டதா உனக்கு? உன் அம்மாவின் உயிரை வாங்கிய காரியத்தையே நீயும் செய்ய விரும்புகிறாயா?'' என்று கேட்டான்.

''ஆமாம். நான் உன்னை உயிரோடு விட மாட்டேன். என் அம்மாவைக் கொன்றவன்!''

சிதறிக் கிடந்த கடிதங்களையும் அவன் எதிரே ஒருமித்துத் தள்ளினான். பிறகு ஒரு கட்டுக் காகிதங்களை அவள் கண்ணெதிரே ஆட்டி, ''இவையெல்லாம் மணியார்டர் கூப்பன்கள். உன் படிப்புக்காக உன் தாயார் பெயருக்கு அவ்வப்போது வந்த பணங்கள்!''

ரூபா அந்தக் கடிதங்களைப் படிக்கத் தொடங்கியதுமே அவள் ஐயம் கலைந்து நம்பிக்கை உருப்பெற்று விட்டது. ஜானின் உளறலில் உள்ள உண்மை விளங்கியது. தனது புதிய எசமானி பல்லாண்டுகளாகத் தன் தாயாரின் பெயருக்கு எழுதிய அந்தக் கடிதங்களைப் படித்ததும், ரூபாவுக்குத் தன் காலடியிலிருந்த தரை நழுவி நழுவிப் போகிறாற் போன்ற பிரமை தட்டியது. கண்களை

# இன்பத் தென்றல்



''அந்தப் பாவத்துக்குப் பிராயச்சித்தம் தேடத்தான் நான் இன்று இங்கு வந்திருக்கிறேன். உன் தலை விதியையே மாற்றி அமைக்கப் போகிறேன். கிடைப்பதைப் பாதி பாதியாகப் போட்டுக் கொள்ளுவோம். உனக்குச் சம்மதமா, சொல்!''

''என்ன உளறுகிறாய்?''

''ஆமாம். உளறத்தான் உளறுகிறேன். உளறினால்தான் என் மீது படிந்திருக்கும் கறை அகலும். உன் அம்மாவைக் கொன்றவன் அல்லவா? உன் மானம் காக்க, நான் பணம்பெற என் உளறல் பலன் அளிக்கும்!''

''மானமாவது, பணமாவது! உன் உளறலுக்கு ஓர் எல்லையே இல்லையா?''

''உண்டு. நீ கிறிஸ்தவப் பெண் அல்ல; அதோடு ஏழையும் இல்லை. நீ உயர்ந்த பணக்காரக் குடும்பத்தைச் சேர்ந்த பெண்!''

''பணக்காரக் குடும்பத்தைச் சேர்ந்தவளா? இல்லவே இல்லை!''

''நீ உன் உண்மையான தாயாரின் பெயரைத் தெரிந்து கொள்ள விரும்புகிறாயா? அவள் குடும்பத்தைப் புரிந்து கொள்ள விரும்புகிறாயா? நான் சொல்வதைக் கேட்டால், உன் வாழ்க்கையில் உள்ள கஷ்டங்கள் அனைத்தும் தீர்ந்துவிடும்.''

''சொல், யார் என் தாயார்? நான் எந்தக் குடும்பத்தைச் சேர்ந்தவள்?''

''உன் தாயார் பெயர் சசிபாலா. இன்னார் குடும்பத்துப் பெண். இன்னார் குடும்பத்து மாற்றுப் பெண். இன்று உனக்குப் புது எசமானியாக விளங்குகிறாளே, அவள்தான்!'' ஜான் தன் உலர்ந்த உதடுகளை நாவினால் தடவி விட்டுக் கொண்டே குறும்பு நகை புரிந்தான்.

''பொய், முழுப் பொய்!'' ரூபா மிகுந்த எரிச்சலுடன் கூவினாள்.

''நான் சொல்வது பொய் என்றால், இந்தக் கடிதங்களைப் படித்துப் பார். எது பொய், எது நிஜம் என்று தெரியும்!'', என்று கூறி ஜான் தன் கையிலிருந்த கடிதங்களையும் கீழே

குல்ஷன் நந்தா

இருட்டிக் கொண்டு வந்தது. இருந்தாலும் எப்படியோ ஒன்றன்பின் ஒன்றாகப் பல கடிதங்களைப் படித்து முடித்த பொழுது, ஷீலாவை மின்சாரம் தாக்கினாற் போலத் துடி துடித்துப் போனாள்.

அவளது விழிகள் அலர மலர விரிவதைக் கண்ட ஞானுமே சுதி கலங்கிப் போய்விட்டான்.

தான் உண்மையாகவே க்ஷமாவின் கருவில் பிறந்த மரு என்பதை ஷீலா புரிந்து கொண்டு விட்டாள். அது மட்டுமா? அந்தக் கறை தெரியாமல் தன் முந்தானையால் தன்னை மறைத்து வளர்த்து ஆளாக்கியவள் க்ஷமாவின் வீட்டுச் சாதாரண வேலைக்காரி என்பதையும் உணர்ந்தாள். அதற்காக அவள் கணவனின் எத்தனை எத்தனை கொடுமைகளைப் பொறுத்துக் கொண்டாள்? ஆறுதும் வாயைத் திறந்தாளா? ஞான்தான் தன் முதல் கணவன், இரண்டாம் கணவன் எல்லாம். தான் அவனுக்குச் சிறிதும் நம்பிக்கைத் துரோகம் செய்யவில்லை என்று சொல்லித் தப்பிக்க முயன்றாளா? தன் எசமானியின் நலனை நினைத்து அந்தக் களங்கத்தைத் தன் தலையிலே அல்லவா சுமந்து கொண்டாள்?





இந்தச் சிலுவைச் சங்கிலியில் என்ன சிறப்பு? இது மொத்தமும் ஒரே மரத்தில் கடைந்து அமைக்கப்பட்டதுதான். இங்கிலாந்தைச் சேர்ந்த ரெவரண்ட் வில்லியம் மாயோ அவர்களது கைவண்ணம் இது.

விகாண்ட் - முத்து

ரோஸி அவன் கண்களுக்கு மிகச் சிறந்த பெண்மணியாக — தெய்வப் பெண்ணாகத் தோன்றினாள். ஆம், அவனுக்குக் கண் கண்ட தெய்வம் ரோஸிதான்!

இந்த ரகசியம் அம்பலமாகி உண்மை விளங்கியபின், அத்தகைய தெய்வத்தின் கால்களைத் தொட்டுக் கண்களில் ஒற்றிக் கொள்ளும் பாக்கியம் தனக்குக் கிடைக்காமற் போய்விட்டதே என்று எண்ணி மருகினாள். அப்பொழுது அவளுக்குத் தன் மூளையே வெடித்துவிட்டாற் போலத் தோன்றியது. அவள் தன் விழிகளைக் கோணலாக்கி ஜானை வெறித்துப் பார்த்தாள். பிறகு தன் கையிலிருந்து காகிதக் கட்டுக்களை அவனுடைய கண்களுக்கு எதிரே நீட்டி ஆட்டி, "இந்த ரகசியத்துக்கு நீ என்ன விலை கேட்கிறாய்?" என்று கேட்டாள்.

"அதுதான் சொன்னேனே! பாதிப் பாதி என்று!" என்றான் அவன்.

"முடியாது. பாதி எனக்கு, பாதி உனக்கு! சம்மதமா, சொல்!" என்று கேட்டு வெறித்த கண்களோடு அவனை விழுங்கிவிடுபவள்போல் பார்த்துக் காகிதக் கட்டை மீண்டும் அவன் எதிரே ஆட்டினாள்.

"நீ சொல்வதென்ன, நான் சொல்வது என்ன? பாதிப் பாதி என்றால் எனக்குச் சம்மதம் என்றுதான் சொல்லுகிறேனே!"

"எனக்குப் பாதி, உனக்குப் பாதிதான். சம்மதமானால் பேசு. இல்லாவிட்டால் நடையைக் கட்டு!" வெறித்த பார்வையோடு வாசலுக்கு வழிகாட்டினாள் ரூபா.

"நீயும் நானும் கூறுவது ஒன்றுதான். உனக்குப் பாதி, எனக்குப் பாதி!" விளக்குவதாக நினைத்துக் கொண்டு ஜான் கூறினான்.

"அட, மானம் கெட்டவனே! செல்லரித்துப் போயிற்று என் தாயாரின் வாழ்க்கை! தீராப் பழி பெற்றது என் வாழ்க்கை! நீ செய்த வேலை என்ன? எதற்காகப் பாதிப் பங்கு கேட்கிறாய்? சொல்லடா, சீக்கிரம்!" என்று சீறினாள் ரூபா.

தன் வாழ்க்கையின் இரகசியம் அம்பலமானதும் ரூபா தன் நினைவு இழந்துவிட்டாள், அதனால் அறிவு பேதலித்துப் பேசுகிறாள் என்று எண்ணி ஜான் அவள் முகத்தைப் பார்த்தான். நிமிஷத்துக்கு நிமிஷம் நிறம் மாறிய அவள் முகம், அவளுடைய மனத்தினுள்ளே எத்தகைய போர் நிகழ்ந்து கொண்டிருக்கிறது என்பதைப் படம் பிடித்துக் காட்டியது. ரூபாவின் கரிய விழிகள் நிலைகுத்தி விட்டாற் போல விறைத்து விரிந்து ஓரிடத்தில் நின்றன. தாயாரின் சாவுக்குப்பின் இத்தனை பெரும் அதிர்ச்சியை அவளால் தாங்க முடியவில்லை போலும்! அவள் ஜானையே இமை கொட்டாமல் விந்தைப் பார்வையோடு உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

ரூபாவின் நிலை இன்னும் கெடுவதற்கு முன்னால், ஜான் அங்கிருந்து போய்விட முனைந்தான். அவன் வாசற்படி தாண்டியிருக்க மாட்டான். வீட்டுக்கு வெளியே ஒரு கார் வந்து நின்றது. அதைக் கண்டவன் கதவுக்குப்பின் ஒளிந்து கொண்டு வருகிறவர்கள் யார் என்று பார்க்கலானான்.

கதவைத் திறந்து கொண்டு சுஷமா உள்ளே நுழைந்தாள். அவள் பார்வை மகள் மீது பதிந்ததும், ஜானின் போதை எல்லாம் இருந்த இடம் தெரியாமல் மறைந்தது. மயக்கம் தெளிந்தாலும் மயங்கி நின்றான். ரூபாவின் வெறிச்சிட்டு நிலைத்த பார்வை சுஷமாவின் மீது திரும்பியது. சிறிது நேரத்துக்கு முன்பு அங்கு அடித்து ஓய்ந்திருந்த புயலைப் பற்றி அவளுக்கு எதுவுமே தெரியாது. ஆகையால், தாயாரின் சாவை நினைத்துத்தான் மகள் இப்படி நிலை குத்தலிட்டு நிற்கிறாள் என்று எண்ணியவளாய் அவள் அருகில் சென்று, தாயாரின் சாவைக் குறித்து வருத்தம் தெரிவித்து ஆறுதல் கூற முற்பட்டாள்.

"இனி எப்பொழுதுமே நீ என்னுடன் இருக்கலாம். உலகில் உனக்கு ஒருவரும் இல்லை என்ற எண்ணமே வரக் கூடாது. நான் இருக்கிறேன். கவலைப்படாதே!" என்றாள் அநுதாபத்தோடு.

ரூபா பேசாமல் அவள் சொன்னதைக் கேட்டுக் கொண்டிருந்தாள். சுஷமாவின் இந்த அநுதாபச் சொற்களால், அவள் நிலையில் எவ்வித மாறுதலும் ஏற்படவில்லை. அதைக் கண்ட ஜானின் இதயமும் நடுங்கித் துடிக்கலாயிற்று. சுஷமா சிறிது நேரம் அவளுடைய துயரம் கப்பிய முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தாள். பிறகு மீண்டும் அவள் கையைப் பற்றிக் கொண்டு தன் அநுதாபச் சொற்களால் ஆறுதல் சொல்லலானாள். ரூபாவுக்கு அது பொறுக்கவில்லை. வெடுக்கென்று தன் கைகளை உதறிக் கொண்டு தனியே போய் நின்றாள். பித்தம் தலைக்கேறியவள் போல் கடகடவென்று சிரிக்கலானாள்.

சுஷமாவுக்கு அவள் அப்படிச் சிரித்தது விந்தையாகப்பட்டது. அந்தச் சிரிப்புக்குப்பின் உள்ள வேதனையைச் சுஷமாவும் உணர்ந்தாள்; ஜானும் உணர்ந்தான். சுஷமா பாய்ந்து அவளைப் பிடிக்க முயன்றாள். ரூபா அவளைப் பார்த்துச் சிரித்தவாறே, "நல்ல வேளை, எசமானியம்மா! சரியான சமயத்தில் நீங்கள் வந்து சேர்ந்தீர்கள். இவன் என்ன உளறுகிறான், தெரியுமா?" என்று கூறி

## திருமணம்



மயிலை ஸ்ரீ K. S. சுப்பிரமணியன் அவர்கள் குமாரன் சிரஞ்சீவி ஸ்ரீராம் B. Com. (Officer, Bank of Madura Ltd., Godown Street, Madras-1)க்கும் திண்டுக்கல் ஸ்ரீ A. ஹரிஹர சுப்பிரமணியன் அவர்கள் குமாரத்தி சௌ. ஜெயலட்சுமிக்கும், திண்டுக்கல் அபிராமி அம்மன் கோவில் தெருவிலுள்ள சங்கரமடத்தில் திருமணம் 4-2-76 அன்று சிறப்பாக நடைபெற்றது. வாழ்க மணமக்கள்





சென்னை, இந்தியன் எக்ஸ்பிரஸ், ஜெனரல் மானேஜர் திரு டி. கே. தியாகராஜன் அவர்கள் குமாரன் சிரஞ்சீவி டி. ரமேஷ் B. A.,க்கும், திரு கே. வி. ரமணி அவர்கள் குமாரத்தி சௌபாக்யவதி நளினிக்கும் 22-1-76ல் சென்னையில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது. திருமணத்துக்கும், அன்று மாலை நடைபெற்ற வரவேற்புக்கும், நண்பர்களும், உறவினர்களும் நகரப் பிரமுகர்கள் பலரும் கலந்து கொண்டு மணமக்களுக்கு ஆசி கூறினர். வாழ்க மணமக்கள்

ஞான் நின்ற மூலையை நோக்கித் திரும்பினாள். இனியும் ஒளிந்து நிற்பதில் பயன் இல்லை என்று ஞான் வெளியே வந்தான். ரூபா ஒரே பாய்ச்சலில் அவனை அடைந்தாள். அவன் கழுத்தில் தொங்கிக் கொண்டிருந்த மப்ளரைப் பிடித்து இழுத்து ஓர் உலுக்கு உலுக்கினாள்.

'' பைத்தியக்காரன்!'' என்று கூறியவாறு அவனைப் பிடித்து இழுத்து வந்து க்ஷமாவுக்கு எதிரில் நிறுத்தினாள். ''இவன் என்ன சொல்லுகிறான், தெரியுமா? என் அம்மா அவள் இல்லையாம். வேறு யாரோவாம். உன் ரோஸி யாருடைய பாவத்தையோ வாழ்நாள் முழுவதும் தன் தலையில் சுமந்து சீரழிந்தாள் என்கிறான். இது ஒரு பேச்சா, எசமானியம்மா ?'' என்று கேட்டாள்.

''ரூபா!'' நடுங்கித்துடிக்கும் குரலில் க்ஷமா அவளை அடக்குகிறாற்போல் கூப்பிட்டாள். பிறகு இரண்டு தோள்களையும் பிடித்து உலுக்கினாள். ஆயினும் அவள் வெறி நீங்கிச் சுய நிலைக்கு வரவில்லை. அவள் ஞானின் கழுத்தைச் சுற்றியிருந்த மப்ளரைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டிருந்தாள். அதை ஒரு சொடுக்குச் சொடுக்கி இழுத்து. '' என் எசமானியம்மாளுக்கு எதிரில் சொல்! என் அம்மா யார் ? சீக்கிரம் சொல்!'' என்று உரத்த குரலில் கேட்டாள்.

ஞான் ரூபாவின் இந்த வெறியாட்டத்திலிருந்து தப்ப ஓர் உபாயம் செய்தான். பூட்டுக் கயிற்றிலிருந்து கழற்றிக் கொள்ளும் வண்டி மாடு போல் மப்ளரின் பிடியிலிருந்து தன் கழுத்தை எப்படியோ உருவிக் கொண்டான். அடுத்த கணம் அங்கு நில்லாமல் 'தப்பினோம். பிழைத்தோம்' என்று ஓடிவிட்டான். அவன் ஓடுவதைக் கண்ட ரூபா ஆத்திரம் கொண்ட மட்டில் திட்டித் தீர்த்தாள். கையில் கிடைத்த பொருள்களையெல்லாம் எடுத்து அவன்மேல் வீசித் தன் ஆத்திரத்தையும் கொட்டிக் கொண்டு பிறர் பொறுமைக்கும் ஒரு சோதனை நடத்திக் களேபரம் செய்து விட்டாள்.

அவன் ஓடி மறைந்ததும், அவள் தன் பார்வையைக் க்ஷமா மீது திருப்பினாள். அவள் விழிகளில் வெறுப்பு தாண்டவமாடிக் கொண்டிருந்தது. க்ஷமாவையே வைத்த கண் வாங்காமல் பார்த்தாள். பிறகு மெதுவாக அவளை நெருங்கி அவள் விழிகளோடு விழிகள் பொருத்தி வெறித்தாள்.

அவளது இந்த நிலையைக் கண்டு க்ஷமாவுக்குக் காலோடு தலை நடுங்கலாயிற்று. உதடுகள் உலர்ந்தன. நாக்கு அண்ணத்துடன் ஒட்டிக் கொண்டது. பயந்த பார்வையோடு அவளை நெருங்கி அரவணைத்துக் கொள்ளக் கையை நீட்டினாள். ஆனால் ரூபா அவள் கைகளை ஓங்கி ஒரு வெட்டு வெட்டி, ''என்னைத் தொடாதே ! உனக்கும் எனக்கும் ஒரு சொந்தமும் கிடையாது; பந்தமும் கிடையாது. என் அம்மா இறந்து விட்டாள் !'' என்று சீறினாள்.

''மகளே!'' அதற்குமேல் பேசக் க்ஷமாவுக்கு நா எழவில்லை !

''உங்கள் வாய்க்கு இந்தச் சொல் பொருந்தாது. அக்கா ! நீங்கள் பணக்காரி என்று எனக்குத் தெரியும். ஆனால் என் அம்மா போன்ற பெரிய மனம் உங்களுக்கு இல்லை.



**விஞ்ஞானம் வழங்கும் கண்ணொளி**

கலிஃபோர்னியாவிலுள்ள டென்னிஸ் டாட்டர்ஸ் என்ற ஒரு வயது குழந்தைக்குக் கண் பார்வை அறவே இல்லை. ஆனால் குழந்தையின் தலையில் பொருத்தப் பெற்றுள்ள எலெக்ட்ரானிக் சாதனத்தின் உதவியால் இச்சிறுவன் உலகைப் 'பார்க்கிறான்.' 'இச்சாதனத்தை முதல் தடவை குழந்தையின் தலையில் பொருத்தியவுடனேயே அவன் முகத்தில் ஓர் ஒளி படர்வதைக் கண்டேன்' என்கிறார் சிறுவனின் தாயார். இச்சாதனத்திலிருந்தும் வெளிப்படும் ரேடியோ அலைகள் அருகிலுள்ள பொருள்களின் மீது பாய்ந்ததும், எதிரொலியாகத் திரும்பி வந்து சிறுவன் கேட்கக் கூடிய ஒலி வடிவங்களாகப் பிளாஸ்டிக் குழாய்கள் மூலம் அவனது செவிகளுக்குள் நுழைகின்றன. இத்தகைய 'எதிரொலி'யின் உதவியால் தான் வௌவால்கள் எதிரிலுள்ள பொருள்களை அறிகின்றன. இச்சாதனத்தின் உதவி கொண்டு சிறுவன் அருகிலுள்ள பல்வேறு பொருள்களைக் கண்டறிகிறான். அவற்றின் உருவ அமைப்பு, அளவு பற்றிக் கூட அவனால் புரிந்து கொள்ள முடிகின்றது. தனக்குப் பிடித்தமான பொம்மை எங்கே இருக்கிறது என்பதைக் கண்டறிந்து அதனைத் தானே பிடித்துக் கொள்ளவும் அவனால் முடிகிறது. ஸ்டான்ஃபோர்டு பல்கலைக் கழக விஞ்ஞானி ஒருவரின் கண்டுபிடிப்பு இக்கருவி.

ஸ்பான்: — 'பாணன்'

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

நீங்கள் ஓர் உயர்ந்த குடும்பத்துப் பெண்; உயர் குடும்பத்து மருமகள் என்பதும் எனக்குத் தெரியும். ஆனால் என் அம்மாவின் உயர்வு உங்களுக்குச் சுட்டுப் போட்டாலும் வராது; ஏழேழு பிறவிகள் எடுத்தாலும் வராது. எந்த மகளைப் பாவச் சுமை என்று கருதி இரவு — பகல் தொட நீங்கள் அஞ்சி அஞ்சிச் செத்தீர்களோ, அந்த மகள் உங்களைத் தன்னவள் என்று கூறிக் கொள்ளத் தயாராயில்லை. நீங்கள் ஓர் அன்னை இல்லை; அன்னையின் பெயருக்கு இழுக்கு தேடித் தரும் மாமிசப் பிண்டம் !''

கோபாவேசத்தில் ரூபா வாயில் வந்தபடியெல்லாம் க்ஷமாவை ஏசினாள். க்ஷமா தன் நிலையை விளக்க எவ்வளவோ முயன்றும் அவள் செவியில் வாங்கிக் கொள்ளாமல் சுடுசொற்களால் துளைக்கவே, க்ஷமா பொறுமை இழந்தாள். மகளிடமே இப்படி ஏச்சுப்பேச்சுக் கேட்பதென்றால்....? க்ஷமாவுக்கு ஆத்திரம் எல்லை மீறியது. தன் பலம் கொண்டமட்டில் ஓங்கி, ரூபாவின் கன்னத்தில் ஓர் அறை வைத்தாள்.

(தொடரும்)

# பாலுஸேரி பெனிபிட் சிட் பண்டு
## பிரைவேட் லிமிடெட்

தலைமை அலுவலகம் & பதிவு செய்யப்பட்ட அலுவலகம்
"பாலுஸேரி பில்டிங்ஸ்". 3. சிங்கராச்சாரி தெரு.
திருவல்லிக்கேணி, சென்னை-5.
தந்தி: 'EVERMANS', போன்: 85834, தபால்பெட்டி: 414

### நீண்டகாலச் சிட்டுகள்

60 மாதங்கள் — 60 அங்கத்தினர்கள்

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|
| LTN | ரூ. 100/- | ரூ. 5,000/- |
| LTO | ரூ. 50/- | ரூ. 2,500/- |
| LTP | ரூ. 20/- | ரூ. 1,000/- |

40 மாதங்கள் — 40 அங்கத்தினர்கள்

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|
| LTA | ரூ. 500/- | ரூ. 20,000/- |
| LTB | ரூ. 250/- | ரூ. 10,000/- |
| LTC | ரூ. 125/- | ரூ. 5,000/- |

### குறுகியகாலச் சிட்டுகள்

20 மாதங்கள் — 20 அங்கத்தினர்கள்
மாதம் ரூ. 30/- முதல் ரூ. 500/- வரை சந்தா

25 மாதங்கள் — 25 அங்கத்தினர்கள்

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை | வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|---|---|---|
| A | ரூ. 200/- | ரூ. 5,000/- | D | ரூ. 25/- | ரூ. 625/- |
| B | ரூ. 100/- | ரூ. 2,500/- | E | ரூ. 20/- | ரூ. 500/- |
| C | ரூ. 50/- | ரூ. 1,250/- | F | ரூ. 15/- | ரூ. 375/- |

சேரும் முறையை விவரித்து எழுதவும்
கிளைகள் : புது டில்லி - பம்பாய் - பெங்களூர் - கல்கத்தா - கோயமுத்தூர்

ஸ்தாபிதம் : 1947



# மன்மத லீலை





இந்தப் படத்தின் மூலம் டைரக்டர் கே. பாலசந்தர் என்ன உயர்ந்த கருத்தை வெளியிட முயன்றிருக்கிறார் என்று மண்டையை உடைத்துக் கொள்ளுவதில் பயனில்லை. இது காலத்துக்கேற்ற படம். 'டீன்' ஏஜர்களைக் கிளுகிளுக்க வைக்கும். சாதாரணமாக மனிதர்களிடம் காணும் பலவீனங்கள் பலவற்றுள் பெண் சபலமும் ஒன்று. இதைப் பற்றிப் பேசவே பலரும் கூசுவார்கள். இப் பலவீனத்தைக் கதாசிரியர் பாலசந்தர் தமக்கே உரிய திறமையுடன் திரைக்கதையில் புகுத்திப் பற்பல நவீன உத்திகளைக் கையாண்டு விரஸம் இல்லாமல் படம் பிடித்திருக்கிறார். ஸெக்ஸ் இருக்கிறது, அது ஸெக்ஸியாக இல்லை. பிரச்னைக்குரிய கதை; பாத்திரப் படைப்பின் திறமையினால் சிறப்படைகிறது.

பல புது முகங்களை அறிமுகப்படுத்தியதோடு நின்று விடாமல் டைரக்டர் என்ற முறையில் அவர்களிடம் நன்றாய் வேலை வாங்கியிருக்கிறார், பாலசந்தர். அளவான வசனம் அழகாகவேயிருக்கிறது.



ஒவ்வொரு பெண்ணிடம் தன்னை இழந்த போதும், மது தன் மனைவி ரேகாவிடம் வந்து பயந்து நடுங்கி, அவளைச் சமாதானப் படுத்தும் கட்டங்கள் சுவையானவை. கமலஹாசன் பேசும் போது கையாளும் ஏற்றத் தாழ்வான குரல் ஒன்றே போதும், அவரைப் பாராட்ட! கதாநாயகனை மனம் வருந்த வைத்துத் திருந்தவும் செய்திருக்கிறார் கதாசிரியர்.

மிகக் குறைந்த உடையுடன் தோன்றி எல்லாப் படங்களிலும் அசிங்கமாக ஆடி வந்த நடிகை ஆலம், மதுவின் துணைவி ரேகாவாக அடக்க ஒடுக்கமாக வந்து ரசிகர்களைத் திகைக்க வைக்கிறார். இவரை ஹீரோயினாகப் போட்ட துணிச்சலைச் சொல்லுங்கள் முதலில்!

ஆபீஸ் குமாஸ்தா மிஸ்டர் ஐயராக வரும் ஹரிஹர சுப்பிரமணியம் சிறந்த நாடக நடிகர். மதுவுக்குப் பாலமன்னிப்பு அளிக்கப் போய் ஐயர் உலக வாழ்வையே துறந்து விடுகிறார். ஆனால் நம்மால் அவரைத் துறக்கவும் முடியவில்லை, மறக்கவும் முடியவில்லை. சொந்தக் குரலில் பாடும் திறமையும் இருக்கிறது இவருக்கு. இவரோடு அடிக்கடி பேசும் மனச்சாட்சியின் குரலைப் பதிந்திருக்கும் உத்தி பாராட்டுக்குரியது. ஆனால், மகேந்திரா (என்னதான் ஒரு தமாஷ் பாத்திரமானாலும்) ஜெமினி 'ஃப்ளை ஓவர்' மீது நடப்பது சரியல்ல; அதன் மீது பாதசாரிகள் நடக்கக் கூடாதே! டைரக்டர் இதைக் கவனிக்கத் தவறி விட்டார். குதிரை மீது சவாரி செய்யும் மது ''மன்மத லீலையை'' என்னும் பாகவதர் பாட்டின் ஒலியுடன் பின்னோக்கிப் போவதாக அடிக்கடி காட்டுவது நன்றாயிருக்கிறது.

திரைக்கதை என்று சொல்ல இதில் விசேஷமாக எதுவும் இல்லைதான். ஆனால் காட்சிகளைத் துரிதமாக ஓட்டிப் படத்துக்குப் புதுமை சேர்த்திருக்கிறார், பாலசந்தர்.

கடைசிக் காட்சியில், மது எல்லாப் பெண்களாலும் கைவிடப்பட்டுப் பல நூறு பள்ளிக் குழந்தைகளுடன் தலைதெறிக்க ஓடி மனம் திருந்துவது அற்புதமாகப் படமாக்கப்பட்டிருக்கிறது.

கவியரசு கண்ணதாசனின் ஆறு பாடல்களும் இனிக்கின்றன. ''நாதமெனும் கோவிலிலே'' என்னும் பாட்டு வாணி ஜெயராமின் தேன்குரலில் தேவாமிர்தமாய் ஒலிக்கிறது. ''ஹலோ மை டியர் ராங் நம்பர்'' என்னும் பாடல் (ஜேசுதாஸ், எல். ஆர். ஈசுவரி பாடுவது) 'த்ரில்' பண்ணுகிறது!

கலாகேந்திராவின் ''மன்மத லீலை'' வண்ணப்படமாக இருக்க, தலைப்பு மட்டும் பச்சையாகத் தொனிக்கிறது. மாற்றியிருக்கலாம்.

— காந்தன்

# வட்டமேஜை

**பா**மரரும் புரிந்து கொள்ளும் வகையில் திரு சந்தானம் கூறும் சத்தான கருத்துக்களை நயமாக எடுத்துரைத்திருக்கும் தங்கள் பாணி மிகவும் பாராட்டுக்குரியது. மனிதனின் அடிப்படைத் தேவையான வேலை வாய்ப்பு, சமூகப் பாதுகாப்பு, கல்வி ஆகியவற்றின் நிறைப்பினை ஒவ்வொருவரும் பெற்றிருந்தால் தாழ்த்தப்பட்ட சாரார் என்ற சொற்றொடரே அர்த்தமில்லாமல் போய்விடும் என்ற வரிகளை, வாழ்வின் உண்மைகளை அப்படியே தத்துருவமாக மெய்ப்பித்துக் காட்டுகின்ற வள்ளுவப் பெருந்தகையின் இரண்டு வரிகளுடன்தான் ஒப்பிட முடியும்.

சென்னை
26–2–76 கருணைக் கதிரவன்

**ப**த்திரிகைகள், நாளிதழ்கள் முதலியனவற்றின் விலைகள் உயர்ந்துள்ளன. அனைத்துப் பத்திரிகைகளையும் எல்லோராலும் வாங்க இயலாத நிலை. இவர்களுக்கு உறுதுணையாக அமைந்துள்ளன நூலகங்கள். ஆனால் தற்சமயம் நூலகங்களில் நடுநிலைப் பத்திரிகைகள், நாள் இதழ்கள் மிகவும் குறைந்து முன்பிருந்த ஆட்சியாளர்களின், கழக வெளியீட்டார்களின் பத்திரிகைகளே நிறைந்துள்ளன.

ஆகவே, கவர்னர் அவர்கள் உடனடியாக நூலக ஆணைக் குழுவை மாற்றியமைத்து மக்களுக்கு நூலகங்களின் வாயிலாகத் தரமான சிறந்த மாத வாரப் பத்திரிகைகளும் நாள் இதழ்களும் கிடைக்கச் செய்யுமாறு பணிவுடன் கேட்டுக் கொள்கிறேன்.

வேடசந்தூர்
22–2–76 ப. ஜெயராஜா

**நீ**ங்கள் எழுதியுள்ளபடி புரட்சித்தலைவர் திரு எம். ஜி. ஆர். அவர்களுக்கோ அண்ணா தி. மு. க.வுக்கோ யாரிடமும் எதற்கும் பேரம் பேசவேண்டிய அவசியம் இல்லை.

திருச்சியில் செய்தியாளர்கள், தேர்தலில் அண்ணா தி.மு.க. நிலை பற்றிக் கேட்டதற்கு அண்ணா தி. மு. க.வுக்குப் பெரும்பான்மை இடங்களை ஒதுக்க உட்படும் கட்சிகளுடன் தான் கூட்டு வைத்துக் கொள்வோம் என்று திரு எம். ஜி. ஆர். தெளிவாக்கியிருக்கிறார்.

செய்தியாளர் கூட்டங்களில் கேள்விக்குப் பதில் அளிப்பது ''பேரம்'' என்று தாங்கள் எந்த வகையில் குறிப்பிடுகிறீர்கள் என்று தெரியவில்லை.

கள்ளக்குறிச்சி
606202 எம், இராமதுரை

**கா**ந்திய நெறி கொண்ட காங்கிரஸும், இறையுணர்வை அறவே வெறுக்கும் தி. க. கலப்பட அ. தி. மு. க.வும் வருங்காலத்தில் எப்படி ஒன்றோடொன்று ஒத்துழைத்துச் செயல்பட முடியும் என்பது புரியவில்லை. எந்தச் சூழ்நிலையிலும் காந்திய அறநெறிப் பண்புகளைக் கைவிடாமல் இருப்பது காங்கிரஸ்காரர்களுக்கும் நல்லது; நமக்கும் நல்லது. காங்கிரஸில் நேரிடையாகச் சேர முடியாத பல தீவிர தி. மு. க.வினருக்கு அ. தி. மு. க. இப்பொழுது புதிய நுழைவாயிலாக இருக்கலாம். இவர்களின் அடுத்த நுழைவாயில் காங்கிரஸ் தான். இதில் காங்கிரஸ்காரர்கள் கண்காணிப்புடன் இருந்தால் காங்கிரஸில் வகுப்புவாதிகள் நுழைவதை ஆரம்பத்திலேயே தடுக்கலாம். இந்தவகையில் தி. மு. க.வினரைக் காங்கிரஸில் சேர்ப்பதில் ஆர்வம் காட்ட வேண்டாமெனக் கூறும் தமிழ் நாடு காங்கிரஸ் தலைவர் ஸ்ரீ மூப்பனாரின் அறிக்கை பொருள் பொதிந்ததாகப் படுகிறது.

சேலம்–7
25–2–76 மகரிஷி

**கல்கி** 29–2–76 வட்டமேஜையில் ராகுலன் என்பவர் எழுதிய கடிதம் கண்டேன். கல்கி புதுக் கவிதைகள் வெளியிடுவதை ஆதரிக்க வந்தவர் என்னையும் என் கவிதைகளையும் அனாவசியமாக விமரிசித்து மிகவும் பாமரத்தனமாக எழுதியிருக்கிறார். மூன்று ஆண்டுகளுக்கு முன்பே கல்கியில் நகைச்சுவைச் சிறுகதை எழுதிய எனக்கு நகைச்சுவை உணர்வு இல்லை என்பதை இவர் மூலம் தெரிந்து கொள்ள வேண்டியிருக்கிறது. புதுக் கவிதையைப் புரிந்து கொண்டிருக்கும் லட்சணம் இவர் கடிதத்தில் வெளிப்படுகிறது. நான் மூலையில் உட்கார்ந்து சவால் விட்டோ, ஆணவம் கொள்ளவோ இல்லை. ஹாஸ்யம் வேறு, அசட்டு ஹாஸ்யம் வேறு என்று காதை முறுக்கிப் பால பாடம் சொல்லித் தர முடியுமா? சர்க்கஸ் குள்ளர்கள் குட்டிக்கரணம் போடுவதைப் பார்த்து விழுந்து விழுந்து சிரிக்கிற பித்துக்குளிகள் சிரிக்கட்டும். அடுத்தவர் விலாவில் குத்தி ''சிரிப்பா, சிரி. உன் நகைச்சுவை உணர்வு இவ்வளவுதானா?'' என்பது விவேகமாகாது. கல்கி புதுக் கவிதைகளை உரிய மரியாதையோடு பிரசுரித்தால் புதுக் கவிதையின் வளர்ச்சியில் அக்கறை உள்ள எண்ணற்ற கவிஞர்களில் நானும் ஒருவன் என்ற முறையில் மகிழ்ச்சி அடைவேன். தரமான, அழகான கவிதைகள் இயற்றும் புதுக் கவிஞர்களுக்குத் தமிழ் கூறும் நல்லுலகில் பஞ்சம் இல்லை.

சென்னை–5
26–2–76 ஆர். கண்ணன்

**யா**ரய்யா சொன்னது லீவு நாட்களில் தான் 'ரேஸ்' உண்டு என்று? நண்பர் வீரராகவன் அவர்கள் பாங்கில் வேலை செய்பவரா? பாங்கில் சனிக்கிழமை பாதி நாள் விடுமுறை விடுவதால் இவர் சனிக்கிழமையும் ரேஸ் உண்டு என்பதையும் அன்று மற்ற அலுவலகங்களுக்கு விடுமுறை இல்லை என்பதையும் மறந்தார் போலும்.

கதையில் வரும் நிகழ்ச்சி பொருத்தமானதே.

சென்னை–4
26–2–76 வேதம்

பெரும்பாலான கேசச் சாயங்கள் மங்கிவிடக் காரணம்
அவை உரோமத்திற்கு வெறும் மேல் பூச்சுப் போடுகின்றன.

# ட்ரூ-டோன்

## ஒவ்வொரு உரோமத்தையும் ஊடுருவுகிறது, மேம்பட்ட நிரந்தர இயற்கைப் பொலிவை அளிக்கிறது உங்கள் கேசத்திற்கு

ட்ரூ-டோனில் உள்ள சிறப்பான சத்துக்கள், உரோமத்தின் (கியூட்டிகிள்) புறத் தோலைத் திறந்து கொண்டு, உட்புற கார்டெக்ஸ் பகுதியை ஊடுருவி அதனுள் அதிவிரைவில் ஈர்க்கப்படுகிறது... எனவே உங்கள் கேசத்திற்கு மேம்பட்ட நிரந்தர இயற்கைப் பொலிவு வந்தடைகிறது.

ட்ரூ-டோன் தயாரிப்போர்: ஹெலன் கர்ட்டிஸ்— உரோம ரசாயனத்திலே தலைசிறந்த அறிவாளிகள்






லிக்விட்

நீங்கள் தேர்ந்தெடுக்க:
ட்ரூ-டோன் லிக்விட் ஹேர் டையு,
மற்றும் வடியாது படியும் கேசச்
சாயமான ட்ரூ-டோன் ஜெல்.

உங்கள் கேசத்தைப் பளபள
மென்மையோடு படிமானமாக
வைப்பதற்கென, இரண்டுமே
உள்ளமைப்பான ஹேர் கண்டிஷனர்
அடங்கியவை.



ஜெல்

கேசத்திற்கு முதல் தடவையாக சாயமிட உத்தேசமா? எழுதிப்
பெறுங்கள் இலவசக் கைப்புத்தகம்: "ஹேர் டையிங் எக்ஸ்ப்ளெயின்டு"
ஜே. கே. ஹெலன் கர்ட்டிஸ் லிட், நேபியன் ஸீ ரோடு, பம்பாய் 400 036.

கருநிறத்திலும் கருஞ் சிவப்பிலும் கிடைக்கிறது.
ஆடவருக்கென் விசேஷ பேக்.

s1/269/JKH-tm

மற்ற விவரங்களுக்கு கீழ்க்கண்ட விலாசத்துக்கு எழுதவும்:
பாரி & கோ., லிமிடெட், சென்னை, கோயமுத்தூர், மதுரை, திருச்சி, செகந்திராபாத்
விஜயவாடா, விசாகப்பட்டிணம், கள்ளிக்கோட்டை, கொச்சின், பெங்களூர் மற்றும் மங்களூர்

"அதோ, அதோ ! திருஞானசம்பந்தர் வந்துவிட்டார்!'' என்ற ஆரவாரம் என்னை உலுக்க, நினைவு மாறி எதிர்த் திசையை நோக்கினேன்.

திருஞான சம்பந்தரைச் சுமந்த பல்லக்கு வந்து குளத்துப் படித்துறை அருகில் நின்றது; அதை அடுத்து அன்னை திருநிலை நாயகியம்மன் பல்லக்கில் வர, பச்சைப் பட்டணிந்த அன்னை யின் அருகில் தங்கக் குடத்தில் பால் ததும்பு கிறது. தங்க வட்டில், கிண்டி. அன்னையின் பல்லக்கு அருகில் வந்ததும், பல்லக்கில் இருந்த பால் குடம், வட்டில் யாவும், ஞானசம்பந்த ரின் பல்லக்குக்கு மாற்றப்படுகிறது. தன் அருட்பாலைப் பிள்ளை சம்பந்தனுக்கு அளித்து மகிழ்ந்த அன்னை அரை நொடியில் ஒடி மறைந்து விடுகிறார். அடுத்துச் சில நிமிஷங் களில் அம்மையப்பர் ரிஷப வாகனத்தில் அலங் கார பூஷிதராய் மலையினின்றும் இறங்கி வந்து திருஞான சம்பந்தருக்குக் காட்சி தரும் சாக் கில் எங்கள் அனைவருக்குமே காட்சி தரு கிறார்; மேளம் முழங்க, மங்களஹாரத்தி நடக்க அத்தனை பெரிய கூட்டம் அமைதி யாகத் தரிசிக்கும் காட்சி. அடுத்து அனைவரும் பால் பாத்திரத்தை, ஞானசம்பந்தர் பல்லக் குக்குக் கொண்டு செல்ல முயலவே கூட்டம் கலகலக்கிறது.

மெள்ள முண்டியடித்து நானும் என் பால் பாத்திரத்தில் ஞானப் பாலைப் பெற்றுக் கொண்டு விட்டேன். பிறகு நிதானித்தபோது நான் உடன் வந்த பத்மா மாமியைப் பிரிந்து விட்டோம் என்பதும் புரிந்தது. நான் மெள்ள இடது கையில் பாலை ஏந்தியபடி, வலது கையால் என் முகத்தைத் துடைத்து ஆசு வாசப்படுத்திக் கொண்டேன். அச்சமயம் என் கைப் பால் சட்டெனப் பற்றிச் சாய்க்கப் படுவதை உணர்ந்தவள், திடுக்கிட்டுப் பார்வையைத் தாழ்த்தினேன். என்ன விந்தை ! அழகே உருவான சிறு பாலகன் என் கைப் பாலை வாயில் சாய்த்துக் கொண்டிருந் தான். சாய்ந்த வேகத்தில் பால் அவன் முகம் மார்பு, எல்லாம் கொட்டித் ததும்பி வழிந் திருந்தது. நான் சட்டெனப் பால் பாத்திரத் தைச் சரியாகப் பிடித்துக் கொண்டு, மெல்ல அவன் வாயில் விட்டேன். அதேசமயம், ''அட ராஸ்கல்! இது என்ன பொல்லாத்தனம்?'' என்று அதட்டியபடி வந்த மனிதரின் ஓங்கிய கையைப் பார்த்ததும் நான் என்னை அறியா மலே சட்டெனக் கையால் குழந்தையை அணைத்துக் கொண்டேன். குறி தவறாது விழுந்த அடி அணைத்த என் கரத்தில் பட, கலகலவென்று கண்ணாடி வளையல்கள் நொறுங்கி உதிர்ந்தன.

''அடடா, மன்னித்துக் கொள்ளுங்கள்.'' தடுமாறி நின்றார் அந்த மனிதர்.

நான் அவரை வெறுப்புடன் பார்த்தேன்.

''நல்ல வேளை, குழந்தை மீது அடி விழுந் திருந்தால் குழந்தை சுருண்டு துடித்திருப் பான்'' என்று கூறி அவனை அணைத்த கரத்தை எடுத்தேன். எடுத்த கரத்தில் வளை குத்திய தால் ரத்தம் கசிந்தது.

அதைக் கண்டதும் பதறினார் அவர். கையை உதறிக் கொண்டார். சட்டெனக் கைக் குட்டையை எடுத்துக் கொண்டு குளத்தில் இறங்கப் போனார்.

''இருங்கள்'' என்று அவரைத் தடுத்து, ''இந்தக் குழந்தையைக் கூட்டத்தில் விட்டு விடாமல் ஜாக்கிரதையாக அழைத்துச் செல் லுங்கள்; நானே குளத்தில் கையைக் கழுவிக் கொள்கிறேன்'' என்றவள் அச்சிறுவனை அவர் அருகில் விட்டுப் பிடித்துக் கொள்ளச் சொல்லி விட்டுப் புறப்பட்டேன். கையில் இருந்த பால் தூக்கை, ரத்தம் கசிந்த கையால் மூட முடியாமல், சற்றுத் தடுமாறுவதைக் கண்ட வர், ''இப்படிக் கொடுங்கள்'' என்று வாங்கி மூடிக் கொடுத்துவிட்டு, ''இந்தாருங்கள், இந்தக் கைக்குட்டையைத் தண்ணீரில் நனைத் துக் கையில் சுற்றிக் கொள்ளுங்கள்'' என்று அவர் குரல் தழுதழுக்கச் சொன்னபோது என்னாலும் மறுக்க முடியவில்லை.

கையைக் கழுவிக் கொண்டு, கரையேறி, மெல்ல நிமிர்ந்தேன். குழந்தையைக் கையில் தூக்கிக் கொண்டு சற்று மலைத்தாற் போல் நின்றிருந்தார். அவரையும் குழந்தையையும் சேர்த்துப் பார்த்த எனக்குப் பெரும் வியப் பாக இருந்தது. களை சொட்டும் குழந்தையின் முகச் சாயல், அப்படியே அவருக்கும் இருந் தது. 'என் சங்கர் அண்ணாவைப் போல் இருக் கும் இவருக்குக் குழந்தையா?' என்ற வியப்பு.

அவரிடம் விடைபெற்று நான் புறப் படவும் பத்மா மாமி என்னைத் தேடி வரவும் சரியாக இருந்தது.

''என்னடி கையில் கட்டு...?'' என்று மாமி மேலே தொடருமுன், நான் முந்திக் கொண்டு, ''கூட்டம் நெரித் துப் பால் தூக்கு மோதி வளையல் உடைந்து குத்தி விட்டது மாமி.

# உடைந்த வளையல்

கிரிஜா



சின்னக் காயம்தான். வாருங்கள் போகலாம்'' என்று முன்னால் நடக்கத் தொடங்கி விட்டேன்.

**வீ**ட்டுக்கு வந்த பிறகும் என் மனத்தில், குழந்தையின் குறுகுறுத்த முகமும், நடந்த சம்பவங்களும் சுழன்று கொண்டே இருந்தன. சம்பந்தரைப் போல் பாலைச் சாய்த்துக் கொண்டு நின்ற குழந்தை! சங்கர் அண்ணாவைப் போல் மிகச் சின்ன வயதுடையவர் அக்குழந்தையின் தந்தை!

'' சட்டையப்பர் அருளால் இந்த இடம் நிச்சயமாக வேண்டும்; உயர்ந்த குடும்பம்; உயர்ந்த படிப்பு; உயர்ந்த உத்தியோகம் ; குறைந்த வயது ; ஜாதகப் பொருத்தமும் அமோகமாக அமைந்திருக்கிறது....'' என்று பெரியவர்கள் உற்சாகமாகப் பேசிக் கொள்வதைக் கேட்க நேர்ந்த போது, மனத்தில் ஒருவித இன்பம் பொங்கியது. அவ்வின்பத்தின் ஊடே உத்஍வத்தில் நடந்த நினைவுகளும், பாலை வாயில் கவிழ்த்துக் கொண்ட குழந்தையின் குறுகுறுத்த முகமும், இளம் தகப்பனாரின் பிரமித்த கண்களும்....' — இப்படிப் பல நினைவுகள். பத்மா மாமி என்னைத் தேடி வருவதற்குச் சில வினாடிகளுக்கு முன்னால் அவரிடம் விடைபெற்ற தருணத்தில் அவர் கூறியது நினைவுக்கு வந்தது.

'' டேய், கண்ணா, மாமிக்கு டாடா சொல்லிவிட்டு வா, போகலாம்!''

''மாமி, டா! டா!'' என்று அச்சிறுவன் சொன்னதைக்கூட என் காதுகள் சரி வர ஏற்கவில்லை. மனம் பொருமியது: 'சே! என்ன மனிதர் ! மாமியாமே, மாமி ! என்னைப் பார்த்தால் இவருக்கு மாமியாகவா தோன்றுகிறது ?' கேள்வி வண்டாகக் குடைந்தது மனத்தை. வீட்டுக்குத் திரும்பி இவ்வளவு நேரமான பின்னரும் எனக்கு மனக் குடைச்சல் அடங்கவில்லை. பதினெட்டு வயது கூட நிரம்பாத என்னைப் பார்த்தால், 'மாமி'யாகவா தோன்றுகிறது? நான் பிரமிக்கத் தக்க அழகி இல்லைதான். ஆனாலும் கோரக் கிழவியாகவும் இருக்கவில்லை. என் வயதுக்குரிய வளர்ச்சியுடன், வனப்பாகவும் இருக்கிறேன் என்றுதான் தோழியரும் மற்றவர்களும் சிலாகித்துப் பேசக் கேட்டிருக்கிறேன். அப்படியிருக்க அந்த மனிதரின் கண்ணுக்கு.... ஒரு வேளை நம் உருவம் கிழடு தட்டிவிட்டதா?' திரும்பத் திரும்ப மனத்துள் எழுந்து கொண்டிருந்த கசப்பை என்னால் ஒதுக்கித் தள்ளவே முடியவில்லை. அறிவுச் சுடர் தெறிக்கும் அவர் கண்களுக்கு நான் மாமியாகத் தோன்றுவானேன் ? என் மீதே எனக்குத் தாழ்வு மனப்பான்மை எழுந்தது ! என் உருவத்தைக் கண்ணாடியில் அடிக்கடி





**ஒருவன் நண்பனிடம் பந்தயம் போட்டான்: — பிறந்த மேனியாக நகரில் ஸ்கூட்டர் ஓட்டிக்கொண்டு போவதாக. பந்தயம் 50 டாலர்கள். அதேபோல் அவன் ஸ்கூட்டர் ஓட்டிக்கொண்டு போனபோது போலீஸ்காரர் ஒருவர் அவனைத் துரத்திச் சென்று பிடித்தார். அபராதம் போட்டார்: 25 டாலர்கள். காரணம்? அவன் தலையில் ஹெல்மட் இல்லையாம்! இடம்: அமெரிக்க நகரம் ஒன்று.** - வொர்ல்டு நியூஸ் - சாமி

பார்த்துச் சமாதானம் செய்து கொண்டு மனக் கசப்பையும், கொதிப்பையும் போக்கிக் கொள்ள முயன்றேன்.

அன்று காலை நான் கண் விழித்த போது இருள் பிரியவில்லை. அந்த அதிகாலை நேரத்திலேயே வீடு களை கட்டிக் கலகலப்பாகிவிட்டது. அம்மாவும், பாட்டியும் திட்டமிட்டபடியே வேலை செய்து கொண்டிருந்தார்கள். அவர்கள் திட்டக் குரல் ஒலியின் தன்மையிலிருந்து நானும் விஷயத்தைப் புரிந்து கொண்டேன். பெரியவர்கள் வெகு நாட்களாக வரித்துக் கொண்டிருந்த வரன், அன்று என்னைப் பெண் பார்த்துப் பேசவே வருகிறார்கள்.

'' உமா! இந்த வரன்தான் எங்கள் எல்லோருக்கும் திருப்தி அளித்த உயர்ந்த வரன்; நீ ரொம்பப் பதவிசாக, அழகாக நடந்து அவர்களைத் திருப்திப்படுத்தணும் '' என்று இப்படிப் பலபடியாக அம்மா என்னை எச்சரித்ததும் மனத்தில், 'திக்'கென்று ஒரு பயம்; ''வருபவர் கண்ணுக்கும் மாமியாகப் பட்டால்?'' சே! இதென்ன எண்ணம்! 'நல்ல மனிதர்' என்று அந்தக் குழந்தையின் தந்தை மீது ஒருவித எரிச்சலும் வெறுப்பும் எழுந்தது.

திமுதிமுவென்று இரண்டு கார்களில் பலர் வந்து இறங்கினார்கள். அடுத்து வரும் காரில் பையன் வருவதாகவும் சொன்னார்கள். எனக்கு நெஞ்சு படபடத்தது. காமரா அறை ஜன்னல் மூலம் வெளியே பார்த்துக் கொண்டிருந்தேன். இதோ கார் ஹாரன்! காரினின்றும் இறங்கியவரைக் கண்டதும் திடுக்கிட்டேன்.

'இவர்.... இவரா பையன்?'

கூடத்தில் பலமான வரவேற்புக்குப் பின் ஒருவர் கூறினார்:

'' சார்! பையன் ஒரு விஷயத்தைத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறான். விஷயம் ஒன்றும் பிரமாதமல்ல; 'சொல்லணும் என்பதும் இல்லை' என்று நாங்கள் மறுத்தும் அவன் கேட்கமாட்டேன் என்கிறான்; ஆகையால், அவன் சொல்ல விரும்பும் விஷயத்தை முதலில் கேட்டுவிடுங்கள்'' என்று நிறுத்தினார்.

அதிசயத்தில் மரத்துப் போன மூளையைக் கசக்கி விட்டுக் கொண்டு, அந்தப் பையன் சொல்லும் விஷயத்தைக் கேட்கக் காதையும் நீட்டிக் கொண்டேன்.

'' சார்! தாயை இழந்துநின்ற என்னை அன்பாக அணைத்து, ஆளாக்கினாள் என் அக்கா. அவளுக்கு வெகுநாளைக்கப்புறம் ஒரு பையன் பிறந்தான். பையன் பிறந்தது முதல் நோய்ப் படுக்கையில் விழுந்துவிட்ட என் அருமைச் சகோதரி பிறகு எழுந்திருக்கவில்லை; முடிவு நெருங்கும் போது, அவள் என்னை அருகில் அமர்த்தித் தன் கண்ணான பையனை என் கண்ணாக வளர்க்கணும் என்று வேண்டினாள்; அவளது வேண்டுகோளைத் தெய்வக் கட்டளையாக நினைத்து வரும் நான் இன்றளவும் அதற்கு எவ்வித குந்தகமும் நேராமல் காத்து வருகிறேன்; என்னுடன் வாழ்க்கை நடத்த வருபவளும் அதை மனப்பூர்வமாக ஒத்துக் கொள்ள வேண்டும். அதற்கு நீங்களும் ஒப்புக் கொள்ள வேணும்'' என்று நிறுத்தினார்.

ஆகாய வீதியில் நிற்கும் தேவர்கள் ஒரு கூடை மலர்களை என் மீது கொட்டியது போன்றதொரு சிலிர்ப்பு, என் உடலைப் புளகாங்கிதம் கொள்ள வைத்தது. என் உள்ளம் வியக்க, உடல் இலேசாகப் பூவாகத் துவண்டது. நேற்று வரை — ஏன் சென்ற நிமிஷம் வரை வேம்பாகக் கசந்த, 'மாமி' என்ற சொல்லும், அதைச் சொன்ன மனிதரும் இன்று தேனாக மனத்தை இனிக்க வைத்த விந்தைதான் என்னே!

சொர்க்கத்தில் மிதந்து கொண்டிருந்த எனக்குப் பெரியவர்கள் சொன்ன பதில் ஒன்றும் தெரியாது!

''உமாமகேசுவரி; வாம்மா, வந்து எல்லோரையும் நமஸ்காரம் செய்யம்மா!'' என்று தாத்தாவின் குரல் உயர்ந்து ஒலித்ததும் தான் எனக்கு உணர்வு மீண்டது.

எல்லாப் பெரியவர்களையும் நமஸ்கரித்து எழுந்த போது என் அப்பா சிரித்தபடியே, ''உமா! இவருக்கு ஒரு சுட்டியான மருமான் இருக்கிறானும்; அவனை அருமையாக வளர்ப்பதில் முகம் சுளிக்காமல் நீயும் பங்கு கொண்டாயானால் பின்னால் அந்தச் சுட்டிப் பையனை உன் மருமகனாகவே ஆக்கிக் கொள்ளலாம்! உன் சம்மதத்தைத் தெரிந்து கொள்ள வந்திருக்கிறார் அவர்.....'' என்று கூறி முடிக்குமுன் ஒரே சிரிப்பு அலையாக எழுந்து அந்த இடத்தை நிரப்பியது.

அந்தச் சிரிப்பில் அவர் கலந்து கொண்டாரோ, இல்லையோ என் பதிலை எதிர்பார்ப்பது எனக்குப் புரிந்தது. 'குழந்தை மீது விழ இருந்த அடியை என் மீது வாங்கிக் கொண்ட என்னிடமா இவருக்குச் சந்தேகம்?' என்று கேட்கத் துடித்தது மனம். ஆனாலும் மனத்தை அடக்கிக் கொண்டு மெள்ள வளை பதிந்து காயமான கரத்தைப் பார்த்து விட்டு, நிமிர்ந்து அவரது கண்களில் என் பார்வையைப் பதித்தேன். வாயினால் சொல்ல இயலாததைக் கண்களால் அறுதியிற்று அறிவித்தவள், சட்டெனத் தலையைத் தாழ்த்திக் கொண்டு உள்ளே ஓடிவிட்டேன்.

---

# கன்னி வயசு, காதல்கொண்ட புதுசு— அன்றுகண்ட மேனியெழில் இன்றைக்கும் நினைவிருக்கோ?

இதுபோன்ற தருணங்கள் வாழ்வில் ஒரு முறைதான் வரும். கணமே பதிவாக்குவீர், அதற்கு உதவி ஐஸோலி I—படமெடுக்கும் அமெச்சூர்களுக்குத் தொழில்—தேர்ச்சிமிக்க காமெரா.

- அக்ரோமேட் f8 லென்ஸ்
- டபுள் எக்ஸ்போஷர் லாக்
- 3 ஷட்டர் வேகநிலை ஸெட்டிங்குகள்.
- அக்ஸெஸரி ஷூ & யூனிவர்ஸல் ஃப்ளாஷ் கான்டேக்ட் பின்.

மேலும் விவரமறிய உங்கள் ஆக்பா—கேவார்ட் விற்பனையாளரோடு தொடர்புகொள்க. மகிழ்ச்சியோடு அவர் புதிய ஐஸோலி-I காமெராவை இலவசமாக இயக்கிக் காட்டுவார்.






**ஆக்பா ஐஸோலி-I**

நினைவூட்டும்

இப்போது, யூனிவர்ஸல் ஃப்ளாஷ் கான்டாக்ட் பின் பொருத்தியது.

AGI

**ஆக்பா-கேவார்ட் இந்தியா லிமிடெட்**

ரூ. 169/=

தயாரிப்பாளர்கள்:

**நியூ இந்தியா இண்டஸ்ட்ரீஸ் லிட்.**, பரோடா ● பம்பாய்

SIMOES/AG/22/75 TM



# ஒளிமயமான எதிர்காலம்!



[ 'புலி வருகிறது' என்பது போல் சொல்லிக் கொண்டு இருக்கிறார்கள், ஒளிமயமான எதிர்காலம் விரைவில் வரும் என்று! நிச்சயமாகவே அப்படி ஒரு பொற்காலம் உதயமாகி விடுகிறது என்று வைத்துக் கொள்வோம். அப்படி உதயமான பொற்காலத்தை உணர்ந்து கொள்ள வழிகள் உள்ளனவா? நிச்சயமாக! கீழ்க்கண்ட கடிதங்கள் எழுதப்படும் காலமே அந்தப் பொற்காலம்! ]

திருவாளர்....
சென்னை.
அன்புடையீர்,

சென்னை டெலிபோன் இலாகாவின் இன்ஸ்பெக்டர்களின் குறிப்புகளைப் பரிசீலனை செய்ததில் மவுண்ட் ரோட்டில் தங்கள் வீட்டில் மட்டும் இன்னும் டெலிபோன் இல்லை என்பதுதெரிகிறது. ஆகவே உடனடியாகத் தங்கள் இல்லத்தில் டெலிபோன் இணைப்பைக் கொடுக்க ஆவலாயுள்ளோம். இத்துடன் உள்ள தபால் கார்டில் உங்கள் சௌகரியத்தைத் தெரிவித்தால் அன்றைய தினம் எங்கள் உதவி மானேஜர் தங்களைச் சந்தித்து மனுக்களில் கையெழுத்துப் பெற்றுக் கொள்வார். அன்றே டெலிபோனும் தரப்படும். டெபாசிட் தொகையைத் தவணை முறையில் கட்டலாம்.




டெலிபோன் தேவையா என்று யோசிக்காதீர்கள். 'டெலிபோனின் உபயோகங்கள்' என்ற பிரசுரமும் இத்துடன் உள்ளது.

தங்கள் பதிலை எதிர்பார்க்கும்
தங்கள் ஊழியன்
............
மானேஜர் டெலிபோன் இலாகா

பி.கு: டெபாசிட் தொகை அதிகம் என்று தாங்கள் கருதினால் தங்களுக்காகப் பத்து சதவிகிதம் தள்ளுபடியும் அளிக்கத் தயாராக இருக்கிறோம்.

திருவாளர்.........

அன்புள்ள ஐயா,

எங்கள் புதிய பெட்ரோல் விற்பனை நிலையத்துக்கு தாங்கள் வருகைத் தருமாறு அன்புடன் அழைக்கிறோம்.

ஒரு லிட்டர் பெட்ரோல் வாங்குபவர்களுக்கு ஒரு பிளாஸ்டிக் பக்கெட் கொடுக்கிறோம்.

பத்து லிட்டருக்கு மேல் வாங்கினால் அழகிய கைக்கடிகாரம் தருகிறோம்.

இந்தப் பரிசுத் திட்டம் நிரந்தரமாக இருக்கும் என்பதையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

இப்படிக்கு
கார்மேகம்
மண்ணடி பெட்ரோல் பங்க்

ஆசிரியர்,
'டெய்லி டூப்'
சென்னை

ஐயா,

அரசாங்கம் இப்படி ஓர் உத்தரவு பிறப்பிக்கும் என்று நான் எதிர்பார்க்கவே யில்லை. அரிசி வாங்குபவர்கள் குறைந்தது பத்து ரூபாய்க்கு வாங்க வேண்டும் என்று சட்டமாம். எனக்கு மாதம் இருபது படி அரிசி இருந்தால் போதும். பத்து ரூபாய் கொடுத்து எண்பது படி அரிசி வாங்க வேண்டும் என்றால் அதை வைத்துக்கொள்ள இடம் வேண்டாமா?

மொத்தமாக அரிசி வாங்கிப் போட்டு விட்டால் பால், முதலியன எப்படி வாங்குவது? தினமும் இரண்டு படி பால் வாங்காமல் இனி ஒரு படி பால் வாங்கினால்தான் இந்த அதிகச் செலவை ஈடுபடுத்த முடியும்? ஏன், நாளைக்கே குறைந்தபட்சம்ஒரு ரூபாய் கொடுத்து ஐந்து படி பால் வாங்க வேண்டும் என்று சட்டம் இயற்ற மாட்டார்கள் என்பது என்ன நிச்சயம்?

இப்படிக்கு,
மூக்கால் அழுதான்

திருவாளர்...........

அன்புள்ள ஐயா,

பெசன்ட் நகரில் உள்ள வீட்டு மனை பற்றி நான் எழுதிய கடிதம் கிடைத்து இருக்கு மென்று நம்புகிறேன். விலை அதிகம் என்று தாங்கள் கருதினால் குறைக்கத் தயாராக இருக்கிறேன். இந்தப் பக்கத்தில் கிரவுண்ட் கிட்டத்தட்ட நாற்பது ரூபாய்க்குமேல் விற்பதால், இதைவிடக் குறைவாக விற்க இயலாது. இருந்தும் தங்களுக்காக 35 ரூபாய்க்குத் தர ஒத்துக் கொள்கிறேன். பத்திர ரிஜிஸ்திரேஷன் செலவு என்னுடையது என்றும் தெரிவிக்க விரும்புகிறேன். தங்கள் பதிலை எதிர் பார்க்கும்—

அன்பன்,
நில-கண்டன்

பி.கு: தாங்கள் தெரிவித்தால், நீங்கள் குறிப்பிடும் தேதியில் நானே நேரில் வந்து சந்திக்கத் தயாராக உள்ளேன்.

## ஃபோட்டோ பேஜ்

பரீட்சை கிட்ட நெருங்குவதால்
உறக்கம் எட்ட நிற்குமா ?

— எம். நடராஜன்



Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600 031.
Managing Editor: T. Sadasivam. Associate Editor: K. Rajendran.

புதுப்புது வேலைநுணுக்கங்களை நெடு நாட்களாகப்பணியாற்றி முதிர்ந்த அனுபவம் பெற்ற பழைய தொழிலாளர் களிடமிருந்து அறிந்து கொள்வதென் பது தொழிற்துறையின் மரபாகும்.

ஆனால் நாங்களோ, தொழிலாளர்களுக் கென்று ஒருங்கிணைந்த வகுப்புப்பாடங் கள் மற்றும் வேலையோடிணைந்த பயிற்சி திட்டங்களின்மூலம் பல்வேறு தொழில் நுணுக்கங்களைப் பயிலுவித்து, அவர்களை மிகச்சிறந்த தொழிலாளர் களாக உருவாக்குகிறோம். எங்கள் வலிமை எஃகில் மட்டுமல்ல, எங்கள் தொழிலாளர்களிலும் உள்ளது.

ஆண்டுகள் பல உருண்டோடினும் நாங்கள் இளமை குன்றாது விளங்கும் காரணம் இதுவே ஆகும்.

எங்கள் வலிமை மேலும் வளர்ந்து கொண்டே இருக்கிறது.

# எஃகினை யொத்த வலிமை





டாடா ஸ்டீல்

TIS 6931

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka
இலங்கையில் விலை 75 சதம் (தபால் செலவு தனி)
மலேசியாவில் விலை (விமானப் பதிப்பு) 60 மலேயா காசு